கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீசங்கராசாரியசுவாமிகள் அருளிச்செய்த

# வாக்கியவிருத்தி.
# அபரோட்சாத்மானுபவதீபிகை.
# துவாதசமஞ்சரிகாதோத்திரம்.

ஷை சுவாமிகளது

பதுமபாதர்முதலிய சிஷ்யர்களாற் செய்யப்பட்ட.

# சதுர்த்தசமஞ்சரிகாதோத்திரம்.
# பஞ்சகோசநேதிக்கிரமம்.

---

இவை

சமிவனக்ஷேத்திரமென்னுங்கோயிலூர்

ஸ்ரீ முத்துராமலிங்க சுவாமிகளின்

ஆதீனத்திற்குரிய

ஸ்ரீ சிதம்பரசுவாமிகள்

மாணுக்கர்களிலொருவராகிய

அ - இராமசுவாமிகளால்

கோயிலூர் ஏட்டுப்பிரதிப்படி பரிசோதித்து

சென்னை:

மிமோரியல் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

---

விய௵ வைகாசி௴

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# வாக்கியவிருத்தி.

யாதொரு குருகடாட்சத்தினாலே சச்சிதானந்தசொரூப மான பிரமம் நானேயென்னிடத்திலேயே தேகாதிபிர பஞ்சங்களெல்லாங் கற்பிதமாய் ரச்சுசர்ப்பம்போலேதோ ன்றுகிறதென்று வறிந்தேனோ அவருடைய பாதபத்மங்க ளுக்கு நமஸ்காரம். (க)

லோககுருவான சங்கராசாரியசுவாமிகள் பிராகிருதமு முட்சுக்களைக்குறித்து வாக்கியவிருத்தியென்கின்ற பிரகர ணத்தைக் குருசிஷ்ய சம்வாதமா யனுக்கிரகம்பண்ணும்படி.

தாபத்திரயங்களாகிற சூரியனாலே மிகவுந் தபிக்கப்ப ட்டுக் கலக்கமுள்ள மனதோடேகூடிச் சமமுதலான சாத னங்களைப்பொருந்தின சிஷ்யனானவன் சற்குருவைப்பார்த் துக் கேட்கும்படி. (உ)

வாரும் சற்குண ஐசுவரிய சம்பன்னரான பகவானே உங்களுடைய கருணையாகிற தெப்பத்தினாலே அனாதியான சமுசாரமாகிற சாகரத்திலே நின்றுயாசமில்லாதபடிக்குக் கரையேறுவனோ வப்படிக் கருணைவைத்துச் சங்கிரகமாக உபதேசம் பண்ணவேண்டியதென்று சிஷ்யன்கேட்கக் குரு சொல்லுகிறபடி. (ச)

வாராய்சிஷ்யா இப்போது நீசொன்னவார்த்தைசற்பு ருடாளுக்குப் பிரியமுள்ளதென் றெனக்குத்தோற்றி நீகேட்

டதின்னதென்று நன்றாய்ச்சொல்லுகிறோம் சாவதானசித்த
னாகக்கேள். (௫)

தத்துவமசியென்கிற வாக்கியத்திலே சொல்லப்பட்ட
சீவபரமாத்ம விஷயமான யாதொரு வயிக்கியக்ஞானமுண்
டோ வதேமோக்ஷத்துக்குச் சாதனமென்று குருசொல்லச்
சிஷ்யன்கேட்கிறபடி. (௬)

வாரும்சுவாமி சீவனாவதார் பரமாத்மாவாவதார் இந்த
சீவாத்மா பரமாத்மாக்களுக்கு வயிக்கியந்தானெப்படி தத்
துவமசியென்கிற வாக்கியந்தானெப்படி அயிக்கியத்தைப்
பிரதிவாதிக்கிறதென்று சிஷயன்கேட்கக் குருசொல்லு
கிறார். (௭)

வாராய்சிஷ்யா சீவாத்மா பரமாத்மாக்களாரொன்று
நீகேட்டதற்குச் சமாதானஞ் சொல்லுகிறோம். இப்படிக்கே
ட்டநீயே சீவன்-உன்னைவிடச் சீவன் வேறில்லை நீ நம்மைக்
குறித்து நானாவதாரொன்று கேட்டநீயே யந்தப்பிரமமானாய்
சந்தேகமில்லையென்று குருசொல்லச் சிஷ்யன் கேட்கிறான்.

வாரும்பகவானே யிதுகாறும் பதார்த்தங்களை யறியே
னெப்படி யறியாமலிருக்கிற நானகம் பிரமாஸ்மியென்கிற
வாக்கியார்த்தத்தை யெப்படியடைகுவேன் சொல்லுமென்
றுகேட்ட சிஷ்யனைக்குறித்துக் குருசொல்லும்படி. (௯)

வாராய்சிஷ்யா நீ சொன்னவுத்தரஞ் சத்தியமே இதி
ற் சந்தேகமில்லை வாக்கியார்த்த வனுபவத்தைப் பொருந்து
கிறதற்குப் பதார்த்தக்ஞானமே விசேஷம் அதிற்றொம்பத
லட்சியார்த்தத்தை யுனக்குச் சொல்லுகிறோம். (௧௦)

அந்தக்கரணமென்ன அதினுடைய விருத்திகளான
மனோபுத்தி சித்தமகங்காரங்களுக்குச் சாட்சியாகவுஞ் சுயம்

பிரகாசரூபமாகவுஞ் சதானந்த சொரூபமாகவும் நீயிருந்து கொண்டு ஆத்மாவை யேனடையவில்லையென்று சொல்லுகிருய். (கக)

இன்ன மெப்படியென்ருல் சத்தியக்ஞானுநந்த சொரூபமாகவும் புத்திக்குச்சாட்சியாகவும் ஞானவடிவாகவு மிருக்கின்ற வாத்மாவே நானென்று நிச்சயித்துத் தேகாதிப்பிரபஞ்சத்தை விட்டுவிடு. (கஉ)

ஏன்தேகாதிப்பிரபஞ்சத்தை விடவேண்டுமென்ருல் சொல்லுகிறோம் தேகாதிப்பிரபஞ்சங்களெல்லாங் கடாதிகளைப்போலே ரூபாதிகளோடேகூடித்திரிசியமாகையா லனுத்மாவென்றும் ஆகாசாதிபஞ்சபூதவிகாரத்தைப் பொருந்தினதென்றும் அறி. (கங)

இப்படிச்சொன்ன குருவைப்பார்த்துச்சிஷ்யன் வாரும் சுவாமி தேவரீர் சொன்ன தேகாதிப்பிரபஞ்சலக்ஷணம் அனுத்மாவென்றறிந்தே னினியாத்மசொரூபலக்ஷணத்தைக் கரதலாமலகம்போலே யடியேனுக்குத் தெரியும்படியாக வனுக்கிரகம்பண்ணவேண்டியது. (கச)

வாராய் சிஷ்யா கடத்தைப் பார்க்கிறவன் கடமாகாதபடிக்குத் தான் வேரு யெப்படி யிருக்கிருனே வப்படியே தேகாதிப்பிரபஞ்சத்தைப்பார்க்கிற நான் வேறென்றறி (கரு)

இப்படியே இந்திரியங்களை மனேபுத்திப் பிராணன்களைப்பார்க்கிறவனுன அந்தத்தேகேந்திரியங்கள் நானல்லவென்றறி. (கசு)

இந்தத் தேகேந்திரியக்கூட்டரவு நாமென்போமானல் அவை திரிசியமாகக் காணப்பட்டதால் நாமல்ல திரிசியவில

க்ஷணமாகவுஞ் சாக்ஷியாகவுந்தானிருக்கிறேனென்கிற வனு மானவனுபவத்தினுலே திடமாய் நிச்சயித்துக்கொள். (கஎ)

தேகேந்திரியாதிகளுடைய ஏற்றக்குறைச்சலாக விருக் கிறவியாபாரங்க ளெந்தச் சன்னிதான விசேஷத்தினுலே காரியங்களுக்கேதுவாகுதோ வதுவே நானென்றறி. (கஅ)

ஊசிக் காந்தமானது தானசையாம லிருந்துகொண்டு ஊசிமுதலானவற்றை யெப்படிச்சேட்டிப்பிக்கப் பண்ணுகிற தோ அப்படியே பிரத்திகாத்மாத்தா னிருவிகாரமாயிருந்து புத்திமுதலானவற்றை யசைப்பிக்கிறதோ வதுவேநானென் றறி. (கக)

தேகேந்திரியமான பிராணன்கள் சடங்களாயிருந்தும் பிரத்திகாத்ம சன்னிதானப் பிரகாசத்தினுலே சேதனம்போ லே விளங்குகின்றனவோ வதுவே நானென்றறி. (உ0)

என்மனது பக்கத்திலே போயிற்று. அங்கே நிலைப்பாக விருக்கிறதென்று எவனிந்தப் புத்தி விருத்திகளைப்பார்க்கிரு னே வவனே நானென்றறி. (உக)

சாக்கிரஞ்சொற்பனஞ்சுழுத்திகளிலே யந்தக்கரணத்தி னுடைய பாவாபாவங்களைச்சாக்ஷியாய் நிருவிகாரமாயிருந் துகொண்டு எவனறிகிருனே வவனே நானென்றறி. (உஉ)

கடத்தைத்துலக்குவிக்கிற தீபமானது கடத்தைக்காட் டிலும் எப்படி வேருே வப்படியே தேகேந்திரியாதிகளைத் துலக்குவிக்கிறபோதமே நானென்றறி. (உங)

புத்திரகளத்திரபவுத்திராதிகள் யாதொருவானந்தசொ ரூபமான தன்னைக்குறித்துப் பிரியங்களோவந்தப்பிரியங்க

ஊ யகண்டானந்தமாய்ப்பார்த்துக்கொண்டு வருகிறசொரூப மே நானென்றறி. (உச)

நானொருக்காலு மொருவஸ்துவிலேயும் பிரியந்தப்பின வனல்ல வானந்தமாகவே யிருக்கிறவனென் றறிகிறுனே வ வனேநானென்றறி. (உரு)

சூட்சுமதேகத்துக்குள்ளே சாட்சி லட்சணமாயிருக்கிற போதமெதுவோ வதுவே தொம்பத லட்சியார்த்தம். ஆத் மாவுக்குச் சாட்சியென்கிறது மறிகிருனென்கிறது முபசாரச் சொல்லே தவிர வேறில்லையென்றறி. (உசு)

தேகேந்திரியம்மனது பிராணன் அகங்காரமிதுக்ளுக்கு விலட்சணமாய்ச் சாட்சியாய்ச் சகல சமுசாரவிகாரங்களுந்த ள்ளுப்பட்டதாயிருக்கிற யாதொரு சொரூப போத மிருக்கி றதோ வதுவே தொம்பதலட்சியார்த்தமென்றறி. (உஎ)

இப்படித்தொம்பதசோதனை செய்து நேதிநேதியென்கிற வாக்கியங்களினுலே நாமரூப முதலான சகத்தைத்தள்ளி அத்தூலாதி லட்சணங்களைப் பொருந்தி மலத்திரயங்களுந் தள்ளுப்பட்டுச் சச்சிதாநந்த சொரூபமாய்ப் பரிபூரணமாயி ருக்கிற பரமாத்மாவே தற்பதலட்சியார்த்தமான பிரமமெ ன்றறி. (உஅ)

சர்வக்யத்துவமும் பரமேஸ்வரத்துவமும் பூரண சத் தித்துவமும் வேதங்களினுலே எதைச்சொல்லுகிறதோ வது வே பிரமமென்றறி. (உக)

ஒருமிர்த்திகையை யறிந்ததினுலே கடசரவாதிகளையறி ந்தாற்போல வேதத்தினுலே பிரமத்தை யறிந்தாற் சகலமு மறிந்ததாகச் சொல்லுகிறதோ வதுவே பிரமமென்றறி. ()

எது அந்தமில்லாததென்று மெதினுடையகாரியம் பிரபஞ்சமென்றும் வேதஞ்சொல்லுகிறதோ வதுவே பிரமமென்றறி. (௩௧)

முமுட்சுக்களாலே வேதாந்தத்திலே எதை யறியவேண்டுமென்று பிரயத்தினமாகச்சொல்லுகிறதோ வதுவே பிரமமென்றறி. (௩௨)

யாதொன்றைச் சீவாத்மாரூபமாய்ப்பிரவேசித்தாொன்று மெல்லாவுயிரையு மந்தரியாமியாயிருந்து ஏவுகிறுொன்றும் வேதஞ்சொல்லுகிறதோ வதுவே பிரமமென்றறி(௩௩)

எவரைச்சகலகர்மபலதாதாவென்றுஞ்சீவகாரணமென்றும் வேதத்திலே சொல்லுகிறதோ வதுவேபிரமமென்றறி.

வாராய் சிஷ்யா இந்தப்படி தொம்பதார்த்தங்களை யுனக்குச் சொன்னேமினிமேல் வாக்கியார்த்தத்தைச் சொல்லுகிறோம். (௩௫)

தத்தொம்பதார்த்தங்களுக் கசிபதத்தினுலே யயிக்கியமானது வாக்கியார்த்தமென்றறி. (௩௬)

இந்தத்தத்வமசியென்கிற வாக்கியத்தினுலேவாச்சியார்த்தாளான சம்சர்க்கவிசிட்டாளாகியசிவேசுரானுக்குஅசிபதத்தினுலே அயிக்கியஞ்சொல்லக்கூடாது லட்சியார்த்தாளான பிரத்திகாத்மாப்பிரமங்களுக்கு அகண்டாகாசமாக வனுசந்தானம்பண்ணுகிறதென்று பிரமநிஷ்டாளான பெரியவாளுக்குச்சம்மதமென்றறி. (௩௭)

அகண்டாகாசமாவது சரீரத்திரயவவஸ்தாத்திரய சாக்ஷியான பிரத்தீகாத்மாவானவர் பிரமலட்சணமானவத்தொய்தானந்தத்தைப் பொருந்தினது அத் தொய்தானந்தப்

பிரமரூபமானது பிரத்திகாத்மக்ஞானலட்சணத்தைப் பொருத்தினதென்றறி. (௩அ)

வாராய் சிஷ்யா இப்படி யகண்டாகாசமாகிறபோது ததுவென்கிற பதார்த்தம் அபரோட்சத்துவம்பொருந்தினவராமென்றுற் சொல்லுகிறேன்கேள் தத்தொம் பதார்த்தங்களுடைய வாச்சியார்த்தாளைத்தள்ளி லட்சியார்த்தாளான சிவாத்மா பரமாத்மாக்களுக் கயிக்யதம் அகண்டாகாசத்துவஞ்சொல்லுகிறது இப்படிப் பிரத்தீகாத்மா பூரணாநந்தயேகரூபமாயிருப்பாரென்றறி. (௩௯)

இந்தப்படிக் கன்னியோன்னிய தாதாத்மியபிரதிபத்தியான சிவப்பிரம வயிக்கியமெப்போது பிறக்கிறதோ அப்போதே நான் பிரமமல்லாமல் வேறென்கிற சமுசயரூபமான வஞ்ஞானந்தொலைந்துபோமென்றறி. (௪0)

தத்தொம்சியென்கிற வாக்கியார்த்தமானது அகண்டாகாசத்துவஞ்சொல்லுகிறதிலே லட்சியார்த்தாளைக்குறித்துச் சொல்லிற்றேதவிர வாச்சியார்த்தாளுக்குச் சொல்லவில்லையென்றறி. (௪௧)

வாராய் சிஷ்யா இந்த வாக்கியமானது வாச்சியார்த்தாளான சிவேசுராளைத்தள்ளிக் கடாகாச மகாகாச மிரண்டுமொன்றானாற்போலே கூடஸ்தபிரமங்க ளொன்றென்றே சொல்லுகிறேமென்றறி. (௪௨)

இனித்தொம்பதவாச்சியனான சீவலட்சணஞ்சொல்லுகிறோம் நானென்கிற சத்தத்துக்கும் அதற்கதிட்டானமான சைதன்னியத்துக்குமொன்றுதலா யந்தக்கரணப்பிரதிவிம்ப சைதன்னியனான சீவன் தொம்பதவாச்சியனென்றறி. (௪௩)

மாயோபாதிகராயுஞ் சகத்காரணமாயுஞ் சர்வக்ஞத்வாதிலட்சணத்தைப்பொருந்தினவராயும் பரோட்சராயுமிருக்கின்ற வீசுரன் றற்பதவாச்சியனென்றறி. (சச)

நான் பிரமமானேனென்கிறதிடவபரோட்சக்ஞானமெவ்வளவுநாள் வரவில்லையோ அவ்வளவு காலமுஞ்சமமுதலான சாதனங்களை யப்பியாசம்பண்ணிக்கொண்டு சிரவணாதிகள் பண்ணவேண்டுமென்றறி. (சரு).

இப்படி வாச்சியார்த்தாளான சீவேசுராளுடைய திடவபரோட்சக்ஞானமானது எப்போது வருகின்றதோ வப்போதே அவன் சனன மரணரூபமான சமுசாரத்திலே நின்றும் விடுபட்டவனென்றறி. (சசு)

இப்படிக்கொத்த சீவன் முத்தனானவன் சகலகாரணகாரியங்களை விட்டொழிந்தவனாயுந் தூலசூட்சும பூதங்களினாலே மறைக்கப்படாதவனாயுங் கர்மமாகிற விலங்குகளை வென்றவனாயுமிருக்கிறவனுடனே சீவன் முத்தியை யடைகுவனென்றறி. (சஎ)

அந்தச் சீவன் முத்தன் பிராரத்தகன்ம பேதத்தினாலே யனுபவிக்கப்படுகிற போகங்களைப் புசித்துக் கர்மக்ஷய மாகிறபோது மநுடாநந்தமுதற் பிரமானந்த மந்தமான வானந்தங்கள் கடந்தவனாய்ப் புனராவிருத்தியில்லாததாயிருக்கிற சர்வ வியாபகமான விஷ்ணுபத கைவல்லியத்தை யடைவனென்றறி. (சஅ)

வாக்கியவிருத்தி முற்றுப்பெற்றது.

---

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# அபரோட்சாத்மானுபவதீபிகை.

சத்தியமாய் ஞானமாய் ஆனந்தமாய் ஆனந்தசொரூபமான சொப்பிரகாசப் பிரமமே சத்திய மப்பிரம்மாகாரமாகும் அதில் சகச்சாலமுஞ் சுப்பிரகாரமாக விளங்குஞ் சுப்பிரமண்ணியக்கடவுள் பாதாரவிந்தத்துக்குத் தெண்டம்பண்ணி அபரோட்சாத்மானுபவதீபிகை யென்கிற ஸாஸ்திரங்கிரந்தத்திலுண்டானதைத் தமிழினாலே பனுவலாகச் சொல்லுகிறோம்.

அதாவது முதல் நாலுவேதத்திலுமுண்டான நாலுமகாவாக்கியசாரமும் பிரமலட்சணமாகவே பிரதிபாதிக்கிறதென்றதைச் சொல்லுகிறோம். அந்தவாக்கியமாவது பிரபஞ்சசொரூபம் பிரமோகம் - ௧-ஏகமேவாத்துவிதம் பிரமோகம் - ௨-பாவாபாவாதீதம்பிரமோகம் - ௩-சுவானுபவாதீதம் பிரமோகம் - ௪-இவைகளில் முந்தின வாக்கியத்துக்கர்த்தம் பிரபஞ்சசொரூபமே பிரமமாக விளங்குவ தெப்படியென்னில் பிரமத்தைத்தவிரப் பிரபஞ்சமில்லை ஆகையால் பிரபஞ்சசொரூபம் பிரமோகமென்றது பிரமமெப்படிப் பிரபஞ்சமாக விளங்குகிறது, சமுத்திரத்திலே அலைநுரையுண்டானாற்போலே பிரமத்தினிடத்தில் பிரபஞ்சம் உற்பவமாக விளங்குகிறதோ பால் தயிரானாற்போலே பிரமம் பிரபஞ்சமாகப்பரிணமித்துவிளங்குகிறதோ தகப்பனிடத்திலேபிள்ளையுண்டானாற்போலே பிரமத்தினிடத்திலே பிரபஞ்சமாரம்பமாக விளங்குகிறதோ கோவின் கொம்புசமானமாகவிருக்கின்றாற்

போலப் பிரமத்தைப்போலே பிரபஞ்சநித்தியமாக விளங்குகிறதோ பழுதையிற் பாம்புதோன்றுவதுபோலப் பிரமத்தினிடத்தில் பிரபஞ்சம் விவர்த்தமாக விளங்குகிறதோவென்னில் பிரமத்தினிடத்தில் பிரபஞ்சந்தோன்றுகிறது விவர்த்தமேயல்லாமல் மற்ற நாலுதிட்டாந்தமுங் கூடாது. அதேதென்னிற் சமுத்திரத்திலேயுண்டான வலைநுரை குமிழி சமுத்திரத்திலே லயமாகிறதுபோலப் பிரமத்திலுண்டான பிரபஞ்சம் உற்பவித்ததென்னக்கூடாது பால் தயிராம் தயிர் பாலாகாததுபோலப் பிரமம் பிரபஞ்சமாம் பிரபஞ்சம் பிரமமாகாதபடியினல் பிரமம் பிரபஞ்சமாகப் பரிணமித்ததென்னக்கூடாது. தகப்பனிடத்திலுண்டானபிள்ளை தகப்பன்வேறு பிள்ளைவேறு இருக்கக்கண்டாற்போலப் பிரமத்திலுண்டான பிரபஞ்சம் பிரமத்துக்கு வேருகச் சற்றுமிராதபடியினலே பிரமத்தினிடத்தில் பிரபஞ்சமாரம்பித்த தென்னக்கூடாது பிரபஞ்சம் ஒன்றுகண்டா லொன்றுகாணுமல் நிலையற்றுப் போகிறபடியினலே பிரமத்தைப்போலே பிரபஞ்சநித்தியமென்பதுகூடாது. இனி விவர்த்தமெப்படிக் கூடுமென்றால் பழுதைவிகாரமற்றிருக்க அதனிடத்திலுண்டான பாம்பு சகலவிவகாரத்துக்கு மிடமானுற்போலப் பிரமநிருவிகாரமாயிருக்க அதனிடத்தில் பிரபஞ்சவிகாரமுண்டாயிற்றானல் முன்சொன்ன உற்பத்திமுதலான நாலுதிட்டாந்தமும் வேதத்திலே சொல்லுகிறதேயென்றால் அந்த நாலுதிட்டாந்தத்துக்கும் விவர்த்தபட்சத்தில் பிரயோசனமல்லாமல் மற்றப்படிக்கில்லைவிவர்த்தபட்சத்திலெப்படிக்கூடுமென்னில்பழுதையைக் கண்டு பாம்பென்றது உற்பவதிட்டாந்தம் பழுதையிற்பாம்புநிச்சயித்தது பரிணமதிட்டாந்தம் பழுதையிற்பாம்பு சலனத்துவமாகக்கண்டது ஆரம்பதிட்டாந்தம். பழுதையுண்டான

போதே பாம்புமுண்டென்கிறது நித்தியதிட்டாந்தம்இப்படி
நாலுதிட்டாந்தமும் விவர்த்தபட்சத்தில் பிரயோசனமல்லா
மல்நிலைவரமல்லவாகையால் நிருவிகாரப்பிரமத்தினிடத்தில்
பிரபஞ்சம் விவர்த்தமேயல்லாமல் பிரமத்தினிடத்தில் பிரப
ஞ்சமில்லை பிரமமே பிரபஞ்சமாக விளங்குகிறது ஆகையாற்
பிரபஞ்சசொரூபம் பிரமோகமென்றது முதல்வாக்கியத்துக்
கர்த்தஞ் சொல்லப்பட்டது. இப்படிப் பிரமந்தானே பிரபஞ்
சமானல் நானென்று நீயென்றுஞ் சுசாதீயபேதமும் பசுபட்
சிமிருகங்களாதியான விசாதீயபேதமும் இந்தமநுடர் பசுப
ட்சியாதிகளுக்கும் ஒவ்வொன்றுக்கு வெவ்வேறுகுண கன்ம
பேதங்களான சுகதபேதமு மிவைகளுக்கெல்லா மாதார
மான பிருது வியாதி பூதங்களு மிப்படியிருக்கப் பிரமமொ
ன்றென்றறிசிற தெப்படியென்னில் அதற்குப் பிரமமொன்
றேயென்று இரண்டாம் வாக்கியஞ் சொல்லுகிறார் அதாவ
து ஏகமாயத் தொய்தமாய் விளங்கும் பிரம மிதுக்கர்த்தமெ
ப்படியென்னில் பிரமத்தைப்போலப் பின்னையொருபிரமம்
சுசாதீயபேத மில்லாததாய்ப் பிரமத்தைத்தவிரப் பின்னை
யொன்று விசாதீயபேதமில்லாததாய்ப் பிரமத்தினிடத்தில்
வேறுகுணகன்ம குறிகளான சுகதபேதமில்லாததாய் ஏக
மாய் ஒருசைதன்னிய சொரூபமான பிரமமே விளங்குகிறு
ரென்றுசொல்ல ஆனுற் றேற்றும்பிரபஞ்சமேதென்று சங்
கைவரமனே சங்கற்பமே பிரபஞ்சம் அந்தச்சங்கற்பநாசமே
பிரமம் மண்ணைத்தவிரப் பாண்டவிசேஷங்க ளில்லாதது
போலச் சச்சிதானந்தப் பிரமத்தைத்தவிரப் பூதபௌதிகப்
பிரபஞ்சமில்லையென்று சொல்லச் சத்தியமாய்த் தோன்று
கின்ற பிரபஞ்சமில்லையென்று சொல்லுகிறதெப்படியென்று
சங்கைவரக்கண்ணுக்குச் சத்தியமாய்த்தோற்றின கானற்ச

லஞ் சூரியகிரகணத்தைத் தவிர வில்லாததுபோலச் சத்தியமாய்த்தோன்றின பிரபஞ்சமும் அஸ்திபாதிப் பிரியத்தைத் தவிரவில்லை. ஆகையாலேகமாயத்துவிதமாய் விளங்கும் பிரமமென்றது. இரண்டாம் வாக்கியத்துக் கர்த்தஞ் சொல்லப்பட்டது. இப்படிப் பிரமம் ஏகமாகையிற் பிரமங் காரணமாகப் பிரபஞ்சமுண்டாயிற்று. இப்படிக் காரியப்பட்ட பிரபஞ்சத்தினற் பிரமத்துக்கு விகாரமுண்டென்று சங்கைவரக் காரியகாரணத்துக் கப்பாற்பட்டது பிரமமென்றுமூன்றும்வாக்கியஞ் சொல்லுகிறார். அதாவது பாவத்துக்கு மபாவத்துக்கு மதீதமானது பிரமம். இதுக்கர்த்தம் பாவமென்பதுள்ளது அபாவமென்பதில்லாதது உள்ளதான பிரமத்துக்குமில்லாததான பிரபஞ்சத்துக்கு மதிதமானது பிரமமென்றுத்தரம். அதிட்டானக்ஞானமில்லாவிட்டா லஞ்ஞானமாய்ப்போம். அதிட்டானக்ஞானத்தைத் 'தள்ளக்கூடாதென்று சங்கைவர அதற்கு அதிட்டானமுண்டென்றுலாரோபமுண்டாகையா லதிட்டானமு மாரோபமுமிரண்டுமில்லையென்றுத்தரம் ஆனுற் சதாகாலமும் பிரமானுபோகமாயிருக்கவேண்டுமென்று சங்கைவரவதற்குத் தரம் அனுபவிக்கிறது மனுபவிக்கப்படுகிறது மிரண்டாம்-விசாரித்து விசாரக்க்ஞானத்தினு லறிந்ததுபோதுமென்று சங்கைவர அதற்குத்தரம் அறிகிறது மறியப்படுகிறது மிரண்டாம். பிரமமேதானுனதென்று சங்கைவர அதற்குத்தரந்தானுகிறது வஞ்ஞானம் பிரமத்துக்கேவரும் எங்குஞ் சச்சிதானந்தமாய்க் கண்டிருக்கிறது போதுமென்று சங்கைவர அதற்குத் தரஞ் சத்தென்று லசத்துமுண்டு. சித்தென்றுற் சடமுமுண்டு. ஆனந்தமென்றுற் றுக்கமுமுண்டு. வஸ்துவிலட்சணமுண்டென்றுல் மாயாவிலட்சணமுமுண்டு. நீசொன்னசங்கை கூடாதாகை

யாற் பாவத்துக்கு மபாவத்துக்கு மதீதமானது பிரமமென்றமூன்றும்வாக்கியத்துக் கர்த்தஞ்சொல்லப்பட்டது. ஆனல் இப்படிப்பட்டசொரூபநிச்சயமனுபவித்தறிகிறதெப்படியென்னில் அதற்கு நாலாம்வாக்கியஞ் சொல்லுகிருர். அதாவது சுபானுபவத்துக்கும் அதீதம் - பிரமத்துக்கருத்தமதிட்டானமுமாரோபமு மற்றிருக்கிறது சுபாவக்ஞானம் சுபாவந்தானயிருக்கிறேமென்கிற நிச்சயமில்லாததே சுபாவக் ஞானமதுவே குற்றமற்றநிலை அதெப்படியென்ருல் சுபாவந்தானனேனென்ருல் சங்கற்பமா மந்தச் சங்கற்பமற்ற நிலையாகையாலுந் தானனேனென்ருல் நினைவா மதுவும் விகாரமாகையாலு மச்சுபாவந்தானயிருந்தால் சமாதியாமதுவுஞ் சாதனமாகையாலு மதிட்டானத்தைத்தள்ளின சுபாவந் தானனேனென்ருல் தள்ளுகிறதுந் தள்ளப்படுகிறது மிரண்டாமாகையாலுஞ் சும்மாயிருக்கிறதே நிலையென்ரு லதுவுமூடமாகையாலுஞ் சுபானுபவத்துக் கதீதமானது பிரமமென்றது நாலாம்வாக்கியத்திற்கு அருத்தமென்று சொல்லப்பட்டது இந்தப்படி நாலுவேதத்திலுண்டான நாலுவாக்கியம். சம்மதிப்படி ஆத்மலட்சணமறிந்து அனுபவித்தவனே கிருதார்த்தன் இப்படி வாக்கியப்படியறியாம லாத்மநிர்ணய மறிகிறேமென்று-வைராக்கியம்-பத்தி-உபாசனகர்மவனுஷ்டானதிமார்க்கத்திலே யுழன்று கதியுண்டென்கிறவன்-பசித்தவன் பசிதீரவேண்டுமென்று ஆகாசத்தைப்பிடித்து வாயிற்போட்டுக்கொள்ளுகிறவன்போலுங் கண்ணுக்குத்தெரியாதவாகாசத்தைச்சுருட்டிக் கக்கத்தி லிடுக்கிக்கொள்ளுவோமென்று யத்தனிக்கிறவனைப்போலும் கானற் சலத்தைநம்பி ஸ்நானபானகிரியைகள் செய்யப் போகிறவனைப்போலவுஞ் சமுத்திரங் கடக்கவேண்டுமென்கிறவன் கல்லிலே தெப்பமு

ண்டுபண்ணிக் கடக்கப்போகிறே மென்கிறவனைப்போலவும் வைராக்கியாதிகளிலே உழலுகிறார்களென்று சற்குருசுவாமி சொல்லியபடியிந்தவாக்கியங் கேட்டவன் அனேகங்கோடி மநுடருக்குள்ளே யொரு விவேகியான புருஷன் சற்குரு சந்நிதியில் நிஷ்கபடபத்தியுடனே திரிவிதகரணத்தினாலேயும் தெண்டம்பண்ணிசுவாமி ஆத்மசுபாவ நாலுவேதத்திலு நிச்சயமிப்படிச் சொல்லியிருக்க யெனக்கிப் பந்தமெப்படிவந்தது இந்தப்பந்தத்தை யெப்படி நிவர்த்திபண்ணவேண்டுமென்று தயிநிய வாக்குகளுடனே விண்ணப்பஞ்செய்ய அந்த வார்த்தைக்குச் சற்குரு சுவாமியானவரிரங்கி அபரோட்சாத்மாநுபவ தீபிகையினாலே தெரியத்திருவுளம்பற்றுகிறார்.

அதாவது சுவாத்மாவாகிற தேவனைச்சாதியாச்சிரம தபசினாலே சந்தோஷப்படுத்தவேண்டும். அதில்-சாதியாவது-பிரம-க்ஷத்திரிய-வைசிய-சூத்திர-சாதிநாலு-ஆச்சிரம மாவது-பிரமச்சாரி-கிருகஸ்தன்-வானப்பிரஸ்தன்-சந்நியாசி-ஆச்சிரமநாலு. தபசாவது,பிரமாதிலோகவைஸ்வரியந்திரணிகரிப்பதே-தவசு. இந்தச்சாதி யாச்சிரம தபசுகளைச்சாத்திரத்திலேஆத்மநிஷ்டமாகச்சொல்லியிருக்கிறது. அதை விட்டுலோகத்திலேஇந்தச்சாதியாச்சிரம தபசுகளை யசத்தானதேகநிட்டமாகக்கற்பித்துக்கொண்டு நடக்கிறார்களாகையா லாத்மவித்தைக்குத்தடைவந்தது. அப்படித்தடைவராதபடி சாதியாச்சிரம தபசை யாத்மாவிடத்திலேற்றி ஆத்மாவாகிற தேவனைச் சந்தோஷப்படுத்தவேண்டு மது எப்படியென்று லக்குண தர்மங்களைப்பிரித்து ஆத்மாவினிடத்திலே யறிகிறதே சாதி-குணமாவது என்னவென்றால்-சச்சிதாநந்தப்பிரமந்தானே விவர்த்த பாவத்தினாற்குணமாயிற்று. அது எப்படி என்றால், ஆநந்தரூபம் விவர்த்தபாவத்தினால்சத்துவ குணமெனப்

பிரிந்ததினாலே தேவதைகளாயிற்று. சித்துரூபம் விவர்த்தபா
வத்தினா லிராசதகுணமெனப் பிரிந்ததினாலே ஜீவர்களாயிற்று.
சத்துரூபம்விவர்த்தபாவத்தினாற்றமோகுணமென்பபிரிந்ததி
னாற்பூதபவுதிகமாயிற்று. இந்தச்சத்துவகுணப்பிரதானமான
தேவதைகளுமிராசதகுணப் பிரதானமான ஜீவர்களுந்தமோ
குணப்பிரதானமான பூதபௌதிகமு மிந்தமூன்றும்-வெளு
ப்புநூல் சிவப்புநூல் கறுப்புநூல் மூன்றுநூலும் பின்னினா
ற்போலப் பின்னிக்கொண்டு சகத்துவிளங்குகிறது. இந்தக்
குணங்களைப் பிரித்தறிகிறதிற் சாதியுண்டாயிற்று. அதெப்ப
டியென்னி லுள்ளே ராசதம் வெளியிற் றாமதஞ்சூத்திரத்
திற்சூத்திரன். உள்ளே தாமதம் வெளியிலிராசதம் வைசி
யன். உள்ளே சத்துவம் வெளியிலிராசதம் க்ஷத்திரியன்.
உள்ளும்புறம்புஞ்சத்துவம் பிராமணன். இதுக்கர்த்தமெப்
படியென்னிற் சகல சீவகோடிகளுடைய தேகமுஞ்சீவனாதா
ரமாக உள்ளே சூத்திரமாக விளங்குகிற வனுபவம். உள்ளே
ராசதம் வெளியிற்றாமதமாவது. தாமதமானதேகம் வாசிய
த்திலே தோற்றுகையினால் வெளியிற் றாமதமென்றுஞ் சூத்
திரமாக விளக்குவிக்கையினாற்சூத்திரனென்று பேர். இந்தச்
சூத்திரமான சீவனுக்கு வைசிய க்ஷத்திரிய பிரர்மண அவர
வர் செய்கிற கர்மங்களிந்தச் சீவனைப்பிரயோசனமாகச் சிற்
பிரகாச வனுசந்தானத்தினாலே அறிகிறான் ஆகையால் மூன்
று பேருக்குஞ் சூத்திரன் சிசுருடை பண்ணுகிறதென்று பெ
யர். இனி-வைசியருள்ளே தாமதமும் வெளியிலிராசதமுமா
வதென்னவெனில்,இந்தச்சூத்திரமான சீவன் சகல சகவியா
பாரமும் அவதான வபிமானமுள்ளேதாமதமென்றுபெயர்.
வெளியில் வியாபாரமெல்லாஞ் சிவவியாபாரமாக நடக்கிற
தாகையால் வெளியி லிராசதமென்று பெயர். வைசியன்

தொழில் மூன்றுவதென்னவெனில் பசுக்காக்கிறது உழுகிற து வியாபாரம்பண்ணுகிறது-இதிற்பசுக்காக்கிறதாவது அறியாமையாகிய சீவத்துவமான பசுவை யிந்திரியவியாபாரமான காட்டிற்போகாமற்காக்கிறது, உழுகிறதாவது, தாமதமடையாமற் சத்தாகவறிகிறது. இனி வியாபாரமாவது, சித்தென்கிற முதலை வைத்துக்கொண்டு சகலசகவிஷயங்களை யுஞ்சித்தாகவறிகிறது. இப்படி மூன்று தொழிலையு முடையவன் வைசியன். இனி-க்ஷத்திரியனுள்ளேசத்துவமும் வெளியிலிராசதமுமாவது, வைசியினிலுண்டான சின்மயநிலை யனுபவமே யாநந்தமந்தவாநந்தமேஉள்ளேசத்துவமும் வெளியிற் சகல சகச்சாலமுஞ் சின்மயனென்றறிகிறதே வெளியிலிராசதஞ் சகல சகத்துஞ்சின்மயவிளக்கமாக வறிந்து தாமதமண்டாமற்பண்ணுகிறது.

அந்தச்சின்மய நிலைவந்தநிலைப்பு வானந்தமாகிறது-அநுக்கிரகிக்கிறது. இப்படி சத்திரிய லட்சணஞ் சொல்லப்பட்டது. இனிப்பிராமணனுக்குள்ளும் புறம்புஞ்சத்துவமாவது-க்ஷத்திரியனிற் சகலசீவகோடிகளையு மானந்தமாக வனுக்கிரகித்தார். ஆகையால் இப்படியானநிலையேயுள்ளும்புறம்புஞ் சத்துவம் பிராமணனென்று பெயர். இப்படிச்சூத்திரன். வைசியன், க்ஷத்திரியன், பிராமணன் இவர்கள் குணங்களுங்கர்மமும்பிறித்தறிந்ததேநாலுசாதி-இதை யனுபவத்தினு லறியவும் பகவானு மவரவர் சாதிகர்மத்தினுல் மோட்சமடைவார்களென்று கீதையிலே சொல்லியிருக்கிரு ராகையாற் குணகர்மங்களைப்பிரித்தறிகிற வனுபவமே சாதி. இனியாச்சிரமம் நாலில்-பிரமச்சாரியாவது, தன்னுடைய விளக்கம் ஞானம் சொரூபமென்றறிந்து அந்த ஞானதேயுசினுலே நிறைந்தெங்கும் பரிபூரணமாய்ப்பிரமவித்தையினுலே சஞ்சரிக்கிறவன்

பிரமச்சாரி. இனிக்கிருகஸ்தனாவது, நித்திய பரிபூரணானந்த
மான ஸ்திரீயுடனே கூடிக்கொண்டு சிதாகாசகிரகத்திலிருக்
கிறவனே கிரகஸ்தன். இனி வானப்பிரஸ்தனாவது, சொப்
பிரகாசமான வனத்தில் நிரந்தரமு மிருக்கிறவனே வானப்
பிரஸ்தன். இனிச்சந்நியாசியாவது, சுவாத்மாவிடத்திற்சிவா
த்மா பரமாத்மா விரண்டுமேகமாய்ப் பிரகாசிக்கிறதென் ற
றிந்து அந்த வாத்ம விளக்கமாகச்சகலத்தையு மறிகிறவனே
சந்நியாசி. இனித்தபசாவது, பிரமமே சத்தியம் சகத்துமித்
தையென்று அபரோட்சக்ஞானாக்கினியினாலே பிரமாதிகளு
டைய ஐசுவரியவாசாசங்கற்பமென்கிற அவித்தையைத் தகி
க்கப்பண்ணுகிறது தபசு-இப்படிச்சாதி யாச்சிரமம் தபசினா
லே சுவாத்மாவாகிற தேவனைச்சந்தோஷப் படுத்தவெண்டு
மென்றுசற்குருசுவாமியானவர் திருவுள்ம்பற்றச்சற்சீடனானை
வன் மிகுந்தபயபத்தியுடனே சந்தோசசித்தனாய்ச்-சுவாமீ-இ
ந்த வாத்மவித்தையைத் தெரியதிருவுள்ளம்பற்றவேண்டுமெ
ன்றுகேட்கக் குருசுவாமியானவர் தயையினாலே தம்முடை
யகடாட்சவீட்சண்ணியத்தினாற் சிஷ்யனைப்பார்த்து ஆங்கார
மென்கிற மதயானை யிவனைவந்தடாராதபடிக்கும் மனமென்
கிற மாயாமிருகங்கொண்டோடிப்போகாதபடிசித்தமென்கி
ற நாயினுடையபரிசமண்டாதபடிக்குமருட்பார்வை பார்த்து
த்தான் வேதாந்த விசாரக்ஞான மென்கிற சிங்கத்தின்
மே லெழுந்தருளியிருந்து இந்தச் சிங்கத்தினுடையதொனியி
னால் யானைமுதலான மிருகங்கள் சமீபத்தில் வராதபடி செ
ய்து அப்பாற்சூட்சுமபுத்தி நிட்சயாத்மகமானசீடன் சிரசில்
பரப்பிரகாச ரூபமான அஸ்தத்தை வைத்துத் தீட்சை ப
ண்ணினார். அதாவது, தீயென்றுஞ் க்ஷையென்று மிரண்டு
மிதிற்றீயாவது, மனோவாங்கார சித்தம் மூன்று - நிற்க

அவையவதேக அவதான நிச்சயபுத்தி எப்படி நிட்சயமிருக்கிறதென்றூற் பாம்பானது தேசுரூபமான கண்ணினூற் சத்தத்தைக் கிரகிக்கப்படாதென்றறியாமல் மந்திரங்களை ரூப தேசுனூலே கிரகித்துக் கட்டுப்பட்டாற்போலப் புத்தி ரூபமும் ஞானதேசுவென்றறியாமல் தேகநிச்சய வவதானம் வந்தது. அந்தநிச்சயம் மலினத்தைப்போக்கி ஞானதேசுவென் றறிவித்ததே. தீ - என்றுபேர் - இனிச்-ஙசையாவது. சகல கர்ம போகங்களும் நசித்துப்போனதே. ஙை-என்றுபேர் இந்தப்படி நிலைத்தநிலையே உபதேசமிப்படி யுபதேசிக்கபட்டு ஆத்மவித்தியா வினயமுண்டான சிஷ்யனுக்கு வாசனைகள்போய்ச் சித்தசாந்தியாகும்பொருட்டுச் சாதனஞ் சொல்லுகிறூர். அதாவது. ஆத்மசொரூபமே நித்திய மிதுக்குவேறுன அனுத்மசொரூபமான திரிசியமெல்லாம் விபரீத கற்பனையென்கிற பாவனையினூலே நித்தியா நித்தியவஸ்து விவேகம்பண்ணவேண்டும். இகபர வியாபாரமான பிரமாதித்தாபராந்தமான சகலவிஷயங்களிலேயும் வாந்தியசனமல மூத்திரத்தின்பேரிலே யிச்சையில்லாததுபோல விட்டுவிடவேண்டும். எப்போது மிருதயத்திற் சமபாவனையை வரவழைத்துக்கொண்டு வாசனுத்தியாகம்பண்ணவேண்டும். எப்போதும் வாகியவிருத்தி வாராமல் நிக்கிரகிக்கவேண்டும். ஆத்மவிஷயத்தில் நின்று விடையாகாரமாகப் போகாமற் றிரும்பி உபரதியாகவேண்டும்.சகலதுக்கமுந் திதிட்சையினூற் சகிக்கவேண்டும்.குருவேதாந்தசாத்திரத்திற் சிரத்தையினூற் பத்திபண்ணவேண்டும். சமாதானத்தினூற் சித்தமேகாக்கிரம் பண்ணவேண்டும். இந்தச் சமுசாரபெந்தமெப்போது விடுமென்கிற தீவிரவிருப்பத்துடனே மோட்சவிச்சை யுண்டாகவேண்டும். இப்படிச்சொல்லப்பட்ட சாதனசதுட்டையத்து

டன்கூடி நிலைத்துத் தனக்கு நன்மையான ஞானசித்தியாக வேண்டுமென்கிற புருஷன் வேதாந்த விசாரம்பண்ணவேண்டும். அந்தவிசாரமாவது சூரியன் சந்திரனக்கினிப்பிரகாசத்தைத்தவிர விஷயபதார்த்த ஞானமில்லாததுபோல விசாரக்ஞானத்தைத் தவிர நிர்விடையக்ஞான முண்டாகமாட்டாது. அந்த விசாரமாவது நானென்கிறதா ரிந்தத்தேகமேது. இந்தச்சகமுண்டானதெப்படி. இதற்குக் கர்த்தனார். இதற் குபாதானகாரணமென்னவென்று வைராக்கியத்துடன் விசாரித்து நான் பூதகணமுமல்ல. தேகமுமல்ல. இந்திரியங்களுமல்ல. இதற்கு வேறான நிருவிகாரவஸ்துவே நான். அஞ்ஞானத்தினாற் சர்வமும்உண்டாயின. அப்படி உண்டான சர்வமும் ஞானத்தினாலில்லை. நானாவிதமான சங்கற்பவசத்தினாற் கர்த்தத்துவமாயிற்று சங்கற்பநிவிர்த்தியே புருடதத்துவம் - யிது - ஏகமாய்ச் சூட்சுமமாய் சத்தாய் அவ்வியமாய்-ஞாதாவாய்ச். சாட்சியாய்ச். சகத்துக் குபாதானகாரணமானவஸ்துவே நானிதற்குச் சந்தேகமில்லை. இப்படி ஏகமாய் நிஷ்களமாயிருக்கிற ஆத்மாவையு மனேகத்துடன் கூடியிருக்கின்ற தேகத்தையு மொன்றாக வறிகிறதேயஞ்ஞானம், ஆத்மாவுள்ளே ஏவுகிறவர். தேகம் வெளியேயேவப்படுகிறது. இவை இரண்டுமொன்றாக வறிகிறதேயஞ்ஞானம். ஆத்மா ஞானசொரூபர் பரிசுத்தர். தேகமசுத்தமானது. மாமிசமயம் அசுசி. யிவையிரண்டு மொன்றாயறிகிறதே யக்ஞானம். ஆத்மாப்பிரகாசர். தேகந்தாமத அந்தகாரம் இவை இரண்டுமொன்றாக யறிகிறதே யக்ஞானம். ஆத்மா நித்தியசத்தூரூபர். தேக மநித்தியமசத்தியம். இவையிரண்டு மொன்றாயறிகிறதே யஞ்ஞானம். ஆத்மா. சொப்பிரகாசர். சூரியாதிபிரகாசத்தை விளக்கிவைத்து அந்தப்பிரகாச நட்

டமானுலுந் தானட்டமாகாத சுயம்பிரகாசர். தேகமப்பிரகா சஞ் சூரியாதிப்பிரகாசத்தினல்விளங்கி யந்தபிரகாசந்தத்தில் நட்டமாகிறது. இப்படிப்பட்டதேகமு மாத்மாவுமொன்ருக வறிகிறதே யஞ்ஞானம். எப்போது பார்த்தாலுங் கடத்தை யறிகிறவனுக்குக் கடம்வேருயிருக்கிருற்போல என்னுடைய தேகமென்றறிந்திருந்து மூடாகாரத்தினற் றேகந்தானெனன் ற பிமானிக்கிறதாச்சரியம். தேகத்துக்கு. நான். விலட்சண ன்-நானே. பிரமம். நானே சாந்தன்.நானே சச்சிதானந்த லட்சணன். அசத்தானதேகநானல்லவென்றறிகிறதே ஞான ம் - நானிருவிகாரன், நிராகரான், குறையில்லாதவன், அவ் வியன், அசத்தானதேகம் நானல்லவென்றறிகிறதே ஞா னம், நான் விகாரமில்லாதவன், நிராபாசன், நிருவராகன், விரோதமில்லாதவன் அசத்தான தேகம் நானல்லவென்கிற தே ஞானம். நான் நிர்க்குணன், நிஷ்கிரியன், நித்தியன், மு த்தன், பிரகாசன், அசத்தானதேகம் நானல்லவென்றறிகிற தே ஞானம். நான் நிர்மலன், நிச்சலன், அனந்தன், சுத்தன, அசரீரன், அமலன், அசத்தானதேகம் நானல்லவென்றறிகி தே ஞானம். அடாமூர்க்கா புருஷத்துவமாய்ச் சோபனமா ய்த் தேகாதீதமாய் அசமந்தமாய்ச் சும்மாவிருக்கிற ஆத்மா வாகிய உன்னுடைய சொரூபத்தை யுல்லாசத்தினலே தேக ம் நானென்று ஏன் சூனியத்தை யடைகிருயென்று இப்ப டி ஆத்மசொரூபந்தெரியச்சொல்லிச் சுருதியினலுந் தெரியச் சொல்லுகிருர், நானென்கின்ற சத்தத்துக்கு நானென்கின்ற சொல்லுக்குஞ் சம்மதமா யாதாரமாய்ப் பரமாயிருக்கிற வஸ்து ஒருவரோ - இந்தத் தூலதேகமோவென்ரு லனேக மா யிருக்கிறதை யடைந்திருக்கு மப்படிப்பட்ட தூலதேக

யெப்படிப் புருஷனுவானென்று சுருதி சொல்லுகிறது. ஆத்மாவிகார மில்லாதவர் தேகம் விகாரத்துடனே கூடி னது. இந்த விகாரமுடைத்தான தேகமெப்படி புருஷனு வன் புருஷத்துவந்தேகத்துக்கு விலட்சணமென்று வேதத் தினல் நிர்ணயிக்கப்பட்டிருக்கத்தேகமெப்படிப்புருஷனுவா ன். சருவமும் புருஷமயமென்று புருஷசூத்திரத்திற்சொல் லியிருக்கத் தேகம் புருஷனென்று சொல்லுவதெப்படி, பிர கதாரணிய உபநிடதத்திலும்புருஷனுனவன் அசங்கனசலன மலன் நிட்கிரியனென்று சொல்லப்பட்டிருக்கத் தேகமெப்ப டிப்புருஷனுவான். சுயஞ்சொரூபமென்று புருஷனை வேத ஞ்சொல்லியிருக்க. அப்பிரகாசமாய்ச் சடமாயிருக்கிறதேக மெப்படிபுருஷனுவானுத்மா நித்தியா தேகவிலட்சணனொன் றமமலனொன்றுஞ் சுருதிசொல்லியிருக்க,மலமான தேகமெப் படிப்புருஷனுவான் இனிச்சூட்சுமதேகமோவென்று லதுவு மனேகங்களுடனே கூடிக்கொண்டுசலனப்படுகிறது-விகாரி. அவ்வியாபகம் இதுஆத்மாவிடத்திற்றிரிசியம் ஈசுரனுனவாத் மாவியாபகர் -சர்வரூபர், சர்வாதீத, ரவ்விய, ரிப்படிப்பட்ட புருஷனுனவர். சூட்சுமதேகமெப்படியாவர். இனிக்காரண தேகமோவென்றுலவித்தையாத்மக அசத்தான தூல சூட்சு மதேகத்தைப் பிரகாசிக்கிறது. இந்தத்தமசான தேகமாத்மா வினிடத்திற்றிரிசியம்- ஆத்மாநித்தியப்பிரகாசர்-அப்பிரகாச மான காரணதேகமெப்படிப் புருஷனுகுமிப்படித் தேகத்தி னாயத்திற்கு மாத்மாவன்னியமென்று மவரோ புருஷனென் றம் வேதஞ்சொல்லச் சகத்துந்தேகமுஞ்சத்தியமென்று வா திக்கிறதர்க்கமதத்துக்குப்பிரயோசனமில்லவேயில்லை. இப்ப டி ஆத்மாவுக்குந்தேகத்துக்குஞ்சுருதிஸ்மிருதிசம்மதமாக உ பநிடதங்களிற்சொல்லப்பட்டபடியினுற்றேகநானென்கிறபு

த்தி விட்டுவிடு.சீவத்துவம் பேதமல்லவோவென்றாற்சீவத்து
வம்பொய்யானவறிவு,பழுதையிற்பாம்புபிராந்தி,பழுதையை
க்கண்டு பழுதையென்றறியாமற் க்ஷணப்பொழுதிற்பாம்பெ
ன்கின்ற பிராந்தி யெப்படிவந்ததோ அப்படியேஏகரூபமாயி
ருக்கிற சித்துச்செகத்தாகிருதியாகவிளங்குகிறது. விசார
ஞானத்தினாற்சித்தைத்தவிரத்தேகமில்லை, சர்வமுமாத்மாத்
தானென்கிற நிச்சயத்தினால், வியாப்பிய வியாபக-மித்தை-
பரதத்துவமொன்றே சத்திய-மிப்படி யறிந்தவுடனே கற்ப
னைக்கிடமில்லை, சுருதியினாலும், சுவானுபவத்தினாலும் நானா
த்துவ கற்பனை தள்ளப்பட்டது. அத்தொய்தமே காரணமா
னநிலை நிச்சயமாயிருக்க, வன்னியப்பிரகாச முண்டாகவே
மாட்டாது. பரமாத்வாயிருக்கிற பிரமத்தினின்று சமஸ்த பூ
தங்களு முண்டாயிற்றாகையாற் சமஸ்தமும் பிரமந்தானே
இப்படி யாதியான பிரமந்தானே சமஸ்தநாமங்களையும் நா
னாவிதமான ரூபங்களையும் நிறைந்திருக்கிற கர்மங்களையுந்
தரித்துக்கொணடிருக்கிறது என்று சுருதி சொல்லுகிறதெப்
படியென்றாற் சொர்ணத்திலுண்டான பூஷணங்களுக்குச்
சொர்ணமெப்படி யாதாரமோ அப்படியே பிரமத்தி லுண்
டான சகத்துக்குப் பிரமந்தானே யாதாரம். யாதாமொரு
மூடன் சீவாத்மா பரமாத்மாவுக்கு அற்பமாகிலும் பேதங்
கண்டானோஅவன் சந்தேகசித்த முண்டானவனாகிறா னெப்
போ தஞ்ஞானத்தினாற் றொய்த சங்கற்ப முண்டாகுதோ
அவ்விடத்திற் பிரமத்தை வேறாகவறிந்தவன். எப்போதுசர்
வமு மாத்மாவென்று நிச்சயமறிந்தான். அவ்விடத்திலணுமா
த்திரமாகிலு மாத்மாவுக்கு வேறுகாணமாட்டான். யாதொ
ருஞானத்தினாற் சமஸ்தபூதங்களும் ஆத்மசொரூப விசாரமு
ண்டாகிறதோ அவனுக்கு மோகமில்லை அவனிரண்டாகத்

துக்கப்படானிதுக்குச்சம்மதி பிரகதாரணிய வுபநிடதத்திலய
மாத்மா பிரமமென்று. பூதபவுதிகங்களெல்லாம் பிரமந்தா
னேயென்று சொல்லுகிறது. இந்த லோகமானது அனுபவி
க்கப்பட்டு விவகாரதசையில் நிச்சயமாயிருந்தாலு மதுவசத்
துருபஞ் சொற்பனமானது தோன்றி அந்தக்ஷணமே கெட்
டதுபோல விந்தலோகமேயில்லை. அதெப்படியென்னிற் சா
க்கிரத்திற் சொற்பனமில்லை சொற்பனத்திற் சாக்கிரமில்லை
இந்த இரண்டுஞ் சுழுத்தியிலில்லை,சுழுத்தி, சாக்கிர சொற்
பனத்திலில்லை இந்தமூன்றுங் குணத்திரய நிர்மிதமாய்ப்.
பொய்யாகவிருக்கும். இதையறிகின்றவன். குணாதீதன். நித்
தியன். ஞானசொரூபன். நிரஞ்சன், சிதாத்மாவான வுன்னிட
த்திற். சகப்பிராந்தி யெப்படியெனனில். மிருத்திகையிற்.
கடப்பிராந்திபோலவுஞ். சுத்தியிலி ரசிதப்பிராந்திபோலவு
மப்படியே யாத்மாவாகிற வுன்னிட்த்திற். சீவத்துவம் பார்
குமிடத்திலில்லை. மிருத்திகை கடமானாற்போலவும். சொர்
ணங் குண்டலமானாற்போலவுஞ். சுத்தியிலி ரசிதமானாற்
போலவு. மாத்மாவிடத்திற் சீவத்துவமுண்டாயிற்று ஆகா
சத்திற் கறுப்புத்தோன்றுகிறாற்போல. ஆத்மாவினிடத்திற்
சீவத்துவமுண்டாயிற்று. ஆகாசத்திற் கருப்புத்தோன்றின
ற்போல ஆத்மாவிடத்திற் சகத்துத்தோன்றிற்று. சமுத்திரத்
திற் சலமானது அலைநுரை திவலைகுமிளிக் காதாரமாய் உள்
ளும் புறம்புஞ் சலமேயிருந்து விளங்குகிறாற்போல. ஆத்மா
வானவர் சகல பிரமாண்டத்துக்குள்ளும் புறம்பும் ஆதார
மாகவிளங்குகிறார். பிருதுவி - கடநாமமாக விளங்கினாலும்.
தந்துபடநாமமாக விளங்கினாலும். தந்து மிருத்திகையைத்த
விரக் கடபடமில்லாததுபோலவுஞ். சித்துத்தானேசெகத்பா.
வமாகியுஞ்செகத்பாவமில்லாமலே விளங்குகிறார். இது அந்

ஞானத்தினுலறியார்கள். கடபடத்தை விசாரிக்குமிடத்திற்.
றந்துவு மிருத்துவுமானதுபோலவு மந்தப் பிரகாரமாகப்
பிரபஞ்சத்தை விசாரிக்குமிடத்திற் பிரமந்தானே நிச்சய
மென்று ஞானிக்கறியப்படும். கடமெப்படி மண்மயமோ
வப்படியே தேகஞ் சின்மயமாகவிருக்கச் சனங்கள் பிராந்
திவசத்தினு லாத்மாவிலனுத்ம விசாரஞ்செய்கிருர்கள்.
மூடத்தினுல். ரச்சுவை. சற்பமென்றுஞ், சுத்தியை யிர்சித
மென்று மறிவதுபோ லாத்மாவைத் தேகமென்றறிகிருர்
கள். சொர்னத்திற் குண்டல நிச்சயம்வந்தாற்போலுஞ்.
சலத்திலலை நிச்சயம்வந்தாற்போலும் மூடத்தினு லாத்மா
வைத் தேகமென்று நிச்சயிக்கிருர்கள். மிருத்திகையிற்கட
நிச்சயம்வந்தாற்போலவும். தந்துவிற்பட நிச்சயம்வந்தாற்
போலவும். மூடத்தினுலாத்மாவைத் தேகமென்று நிச்சயிக்
கப்பட்டது. தாணுவிற்புருடன் நிரணயப்பட்டாற்போலவுங்
கானலிற் சலநிச்சயிக்கப்பட்டாற்போலவு. மூடத்தினுலாத்
மாவைத் தேகமென்று நிச்சயிக்கப்பட்டார்கள். மரங்கள்
வரிச்சுகள் செத்தைமுதலானது வீடென்று நிர்ணயிக்கப்பட்
டாற்போலு, மிரும்பை யாயுதமென்று நிர்ணயிக்கப்பட்டாற்
போலு. மூடத்தினு லாத்மாத் தேகமென்றுநிர்ணயிக்கப்பட்
டார்கள். சலத்தில் விருட்சந் தலைகீழாய்த்தோன்றுவதுபோ
லஞ்ஞானத்தினு லாத்மாவைத்தேகமென்றுபார்க்கிருர்கள்.
ஓடத்திலிருந்துபோகிற புருஷன் கரையிலிருக்கிற மரமசை
யாதிருக்க வசைகிறதாகப் பார்த்தாற்போல மூடத்தினுலா
த்மாவைத் தேகமென்று பார்க்கிருர்கள். சிவப்புப்பூவினுல்.
படிகத்தைச் சிவப்பாகப் பார்ப்பதுபோலுங், கண்ணைச்சுற்றி
.னுலலையாதவீடும் பட்டணமுஞ் சுற்றுகிருற்போலுங் கொள்
ளிக்கட்டையைச்சுற்றினுற் சூரியவட்டம்போல விளங்குவது

போலுங், காற்ருடிகவருகவிருந்துங் காற்றின்வசத்தினுல் வட்டமாகத்தோற்றுவதுபோலும். பெரிதாயிருக்கிற பதார்த்தம் தூரத்திலிருந்துபார்க்கச் சிறிதாய்த்தோற்றுவதுபோலுஞ் சிறிதாயிருக்கிற வஸ்து உபநேத்திரத்திற் பெரிதாகத் தோற்றுவதுபோலு. மஞ்ஞானத்தினு லாத்மாவைத் தேகமென்றறிகிருர்கள் மணியையக்கினியென்றறிந்தாற்போலும் அக்கினியை மணியென்றறிந்தாற்போலும், மேகமோடச் சந்திரனேடுகிறதென்ருற்போலும், சலமசையச் சந்திர னசைகிறதென்ருற்போலு மஞ்ஞானத்தி லாத்மாவைத் தேகமென்றறிகிருர்கள். இப்படியவித்தையினுலே ஆத்மாவுக்குத்தேகவத்தியாசமுண்டாயிற்றென்று விவேகத்தினு லறிவதுவே சீவாத்மா பரமாத்மாவுக்கு ஐக்கியம் தாவரசங்கமமான சகல சகத்துமாத்ம சொரூபமாக வறியப்பட்டா லாத்மாவிடத்திற்றேகமெங்கே வரப்போகிறது தேகமில்லவேயில்லை. அடா மகா புத்திக்ஞானமுடையவனே சர்வக்காலமு மாத்ம நிச்சய மிடைவிடாமற் காலத்தை நடத்து சின்மய யோகத்தினுற் சமஸ்த பிராரத்துவமும் புசித்துக்கொண்டிருந்தும் பயப்படாம லிச்சையில்லாதிரு. ஆத்மக்ஞானம் வந்தாலும் பிராரத்துவம்புசித்துத் தீரவேண்டுமென்கிற சாத்திர மப்பியாசகாலத்திலே யல்லாம லுனக்கில்லை. தத்துவக்ஞான வுதயத்திற் பிராரத்துவமில்லை, தேகாதிகளசத்தானபடியினுலே விழித்தவனுக்குச் சொற்பனமசத்தாய்ப்போனுற்போ லாத்மாவினிடத்திற் பிராரத்துவமில்லை. சென்மாந்தர கன்மமோவென்ரு லாத்மாச் சென்மரகித ராகையாற் சென்மாந்தர கன்மமும்போய்த்-தேகஞ்சென்மித்ததே யென்ருற்-றேகம், முயற்கொம்புபோல வில்லாதது சொற்பன தேக மெப்படியாரோபிதமோ வப்படியே யிந்தஸ்தூலதேகமும், ஆத்மா

வினிடத்தி லாரோப மாரோபதேகத்துக்குச் செனமம் எங்கே வரப்போகிறதென்று சொல்ல. வானுற் குழந்தையாய் எவ்வனமாய்க் கிழவனுகியுஞ் செத்துந் திரிசியமுமாயித் திதியுமுண்டாயிருக்கவில்லை யென்ப தெப்படியென்னிற்செனனமாரோபமாகையாற்றிதியுமித்தையா சொரூப - மஞ்ஞானவுபாதானத்தினுற் றோற்றின விசுவம் ஞானத்தினு லஞ்ஞான நசித்தவுடனே சகப்பிராந்தி யெங்கே வரப்போகிறது. பழுதையைப்பாம்பென்று கண்டபுருடன் யதார்த்த பழுதையைக்கண்டு பாம்பில்லையென் றறிந்தாற்போ லஞ்ஞான ரூபத்திலுண்டான சகத்துசத்ரூபஞானத்தினுற் சத்தைத்தவிரச் சகத்தில்லை. தேகமுஞ்சகத்தின் சம்பந்தமாகையாற்றேகமுமில்லை. தேகமில்லாதபோதேபிராரத்துவமுமில்லை வேதம் பிராரத்துவமுண்டென்று சொல்லுகிறதே யென்று லப்பியாசகாலத்தி லஞ்ஞானதிஸ்டியிலுண்டென்று சொல்லுகிறது யதார்த்தக்ஞானத்திலில்லை, யதீதமாகிய பிரமப் பிரகாசமொன்றுமே யேகமாகவிளங்கு மந்தச்சொரூபமே நீயானுயிதிற் சந்தேகச் சித்தம் வராம லேகமாகவே அத்ததொய்தசின்மாத்திரமாக விருவென்று சொலலி யிந்த நிசத்திதிடமாகிறதின்பொருட்டுப் பதினைந்து சாதனங்கள், சொல்லுகிருர், சாதனமேதுக்கென்றுல் சச்சிதானந்த வாத்மப் பிராப்தியானவனுக்குச் சித்த விகற்பங்கள் வாராதபடி நித்தியாப்பியாசந்தவிர வேறுபாயமில்லை யாகையா லெங்நேரமும் விடாமற் சாதனமப்யாசிக்கவேண்டும், இந்தச்சாதனமாவது, இயம - நியமம்-தியாக-மவுனந்-தேசங்-கால-மாசன-மூலபந்தன-மங்கசாமியஞ்-சமதிஸ்டி- பிராணயாமம்-பிரத்தியாகாரம்-தாரணை - தியானம்-சமாதி ஆக கரு, இதிலியமமாவது-சருவமும்பிரமமென்கிற வறிவினுற் பரிச்சின்னந்தோன்றும

லபரிச்சின்னமாக அயிங்கிலையுடனே கூடிக்கொண்டு இந்திரியக்கிராமங்களை நிறுத்துகிறது. நியமமாவது சுசாதியப் பிரவாகமுண்டாய் விசாதீகந்தள்ளுகிறது. தியாகமாவது, சிதாத்மாவனுபவத்தினாற்பிரபஞ்சகற்பிதம் * லேசமுமில்லாமல்விடுகிறது. இதுவே சத்தியமானமோட்சம்-மவுனமாவது, யாதொரு வஸ்துவை வேதாதிகள் சொல்லமாட்டாமல் மவுனத்தோடுங்கூடித்திரும்பிவருகிறதோயாதொரு வஸ்துவை யோகீசுரர்களால் அடையப்படுகிறதோ அந்த நிலை மவுனம்-இன்னமொருயுத்தி யிப்படி யாதொரு வஸ்துவை வேதஞ்சொல்லமாட்டாமற் றிரும்பி வந்தபடியினாலே வேதத்திலுண்டான பிரபஞ்சமுஞ் சத்துவிவர்த்தமான சத்ரூபமே. இந்தப்படிக்குச் சாதுக்களான யோகிகளுக்குச் சகசமாகக் குழந்தைகளைப்போலிருந்து † அனுபவிப்பது மவுனம்-தேசமாவது, ஆதிகாலத்திலு மினிமேல் வருகிறகாலத்திலு மிப்போது நடக்கிற மத்தியகாலத்திலும் சனசமூகமில்லாதவிட மெந்த வஸ்துவினிடமோ யாதொரு வஸ்துவினாற் சர்வகாலமுஞ் சகலத்திலும் வியாபிக்கப்பட்டிருந்துந் தன்மயம் விடாமற்றானாய்விளங்குகிறதோ வதுவே ‡ தேசம்-காலமாவது, அகண்டானந்தவத் தொய்தப் பிரமத்தினிடத்திற் பிரமதேவனாதியான சகலசகத்தும் வேறாய்த்தோற்றாமல் நிமிசாநிமிசம் பிரியாமற் கூட்டரவு பண்ணுகிற

---

* தோன்றாமலிருக்கிறதெனப் பாடமோதுவாருமுளர்.

† அனுபவித்தவனுபவமே யெனவும் பாடமோதுவாருமுளர்.

‡ தேசத்துக்குச்சொல்லிய அருத்தத்தைக்காலத்துக்கும், காலத்துக்குச்சொல்லிய அருத்தத்தை தேசத்துக்குமாகப் பாடமோதுவாருமுளர்.

காலம். ஆசனமாவது, சுகசொரூபமாக யாதொன்றிலே பிரமசிந்தனை சதாகாலமுமுண்டாகிறதோ அவட மாசனம். இன்னமொருயுத்தி சித்தஞ் சமரசமாய். நித்தியமாய்ச் சமஸ்தபூதங்களுக்கு மாதியாய். விசுவத்துக் கிருப்பிடமாய். நாசரகிதமாய் யாதொருவஸ்துவுண்டோ அந்தவஸ்துவினிடத்திலி யோகீசுராள் வசித்திருக்கிறுர்கள். அவ்விடமாசனம், மூலபந்தனமாவது, சமஸதலோகத்துக்கும் சமஸ்தபூதங்களுக்கும் யாதொன்றுமூலமோ அந்தவஸ்துவினிடத்திலிராசயோகியானவன் சித்தத்தைச் சர்வகாலமும் பந்தித்திருக்கிறது மூலபந்தனம். அங்கசாமியமாவது. சரீரமசையாமல் நிறுத்துகிறதல்ல. மார்பு, கழுத்து, முகம் - சமம்பண்ணுகிற நல்ல காட்டம்போலிருக்கிறதல்ல. சமமாயிருக்கிற பிரமத்தினிடத்திற் பருவதத்திலுண்டான பதுமைகள் சகலமும் பருவதச் சிலையேயாவது போற்சித்தத்தைப் பரமாத்மாவினிடத்திற் சமமாக நிறுத்துகிறதே யங்கசாமியம்-சமதிஸ்டியாவது, மூக்கு நுனியைப்பார்த்திருப்பதல்ல. திஸ்டியை, ஞானமயமாகப்பண்ணிச் சகத்தைப் பிரமமயமாகப் பார்த்திருக்கிறது சமதிஸ்டி. இதற்கு இன்னமொருயுத்தி. பார்க்கிறது, பார்க்கப்படுகிறது-பார்க்கிறவ - னிந்தமூன்று மெவ்விடத்திலில்லையோ அவ்விடத்திற் றிஸ்டிபண்ணுகிறது சமதிஸ்டி-பிராணுயாமமாவது-சித்தமாதியான சமஸ்தபாவவிருத்தியினுலும் பிரமபாவனையாய்ச் சகலவிருத்திகளையு நிறுத்துகிறதே பிராணுயாமம். இதில் ரேசகமாவது-பிரமத்தைத்தவிரப்பிரபஞ்சமில்லையென்று நிஷேதிக்கிறதேரேசகம் - பிரமாகாரமாக நிற்பது பூரகம்-அந்த நிலையழியாத அனுசந்தானம் கும்பகம்-இதுவேபிராணுயாமம்-பிரத்தியாகாரமாவது-சகலவிடயத்திலு மாத்மவிளக்கமாக விருக்கிறதை யறிந்தந்த

சித்தத்தினலச் சின்மயாகாரமாக நிறுத்துகிறது பிரத்தியா காரம். தாரணையாவது-மனது யெங்கெங்குசெல்லுகிறதோ அவ்விடமவ்விடத்திற் பிரமாகாரதரிசனம்பண்ணுகிறது தாரணை-தியானமாவது.பிரமந்தானய் நின்றொரு பிடிப்புமில்லா திருக்கிறது யாதோ வதுவேதியானம், சமாதியாவது-நிருவிகாரமாகப் பிரமாகாரவிருத்தியினல் பூர்த்தியாகியப்படிப் பூர்த்தியானேமென்கிற நிச்சயமற்றிருக்கிறதே சமாதி.ஆக.

௧௫. இப்படிக் கற்பிக்கப்படாத வானந்த மெவ்வளவுக்குவந் தஸ்தகதமாகுமோ அவ்வளவுக்கு மிந்தப்பதினைந்து சாதனங்கத்தையு மற்பசிக்கவேண்டும். இந்தச் சாதனமுண்டானர்ச யோகி சாதனத்தினின்றும் விடுபட்டு இதரவிச்சையாகச் சஞ்சரிப்பன். அவனுக்குத் தத்துவரூபமுமில்லை, மனோவாக்குகளுடைய விஷயமுமில்லை. இப்படிப்பட்ட ராசயோகிக்குப் பலவந்தமாக விக்கினம் வரும். அதாவது. அனுசந்தானமில்லாமற்போகிறது. வியாதி-போகத்திலிச்சை, அன்னபானமிகுந்துகொள்ளுகிறது. நித்திரைவிட்சேபதோற்றந். தமசு-பிரகாசம்-வேர்வை-சூனிய-மிப்படிப்பட்ட விக்கினங்கள்வரும்வந்தாற் பிரமானுபவத்தினல் மெல்லமெல்ல தள்ளிவிட்டுப் பிரமமாகவே யிருப்பன். இந்தயோகிக் கிப்படிப்பட்ட விக்கின மேன்வருமென்றல்பாவவிருத்தியினற்பாவத்துவம் வரும்.சூனியவிருத்தியனற் சூனியத்துவம்வரும். பூரணவிருத்தியினற் பூரணத்துவம் வரும், ஆகையால் யோகியானவன் மற்றவிருத்திகளிற் செல்லாமற் பூரணவிருத்தியிற்றனே நின் றதுவே யற்பசிக்கவேண்டும். இப்படிப் பூரணமாய்ப் பிரம சொரூபமா யிருக்கிற விருத்தியைவிட்டுச் சீவிக்கிற பேர் பசுக்கள் மிருகங்கள்போற் துக்க சீவனுமிந்தப் பூரணவிருத்தியை யறிந்ததிலே வர்த்திக்கிறபேர்க ளேசற்புரு

டாளவர்களேதன்னியாள் லோகத்திரையத்திலு மவரோ நம ஸ்காரயோக்கிய ரவரோ பிரமத்தையடைகிறவர். அவர் வா சாக்ஞானியல்ல. வாசாக்ஞானியாவது பிரமப்பிரதிபாதியத் திலே சமர்த்தளாயிருக்கப் பூரணவிருத்தியில்லாதிருக்க ரா கத்துடனே கூடிக்கொண்டு விவகரிக்கிறவர்களே யஞ்ஞா னிகளுக்குள்ளே மிகவுஞ் சிலேட்டராய்க் கெட்டவர்க-ளொ ருநிமிஷத்திற் பாதியாகிலுஞ் சனகாதிகள் பூரணவிருத்தி விட்டிராமற் சாதிக்கிறாற்போல நீயுமப்படியே பூரணமாக வேயிருந் தனுபவி யந்தப்பூரணவிருத்திக் குபாயங் காரியத் திற் காரணம் வராது காரணத்திற் காரிய மில்லையென்று விசாரிக்கக்காரியம் போங் காரியம் போகவே காரணமுமில் லை. யப்பால் வாக்கு மனதுக்கெட்டப்படாத வஸ்து ஏதுண் டோ வதுவே பூரணயோகமான பிரமமிந்தப்படி காரியகா ரணங்களை யேகமாக வறிவதுவே பிரமவிகசிதமான பூரண விருத்தியுண்டாம். புருஷனானவன் காரணம்வேறு தான் வேறென்றறியாமல் ஒன்றாகவறிந்து காரியங்களைக் காரண த்துக்கு வேறாகாமற் காரிய காரணமொன்றாகவே யனுபவி ப்பன். காரியத்திலே காரணமாகப்பார்த்துக் காரியத்தைப் பரிச்சேதம் விட்டுக் காரணமாகவே யிருந்தப்பானிச்சயாத் மக மெதுவோ வதுவாகவே யிருப்பன். திரிசியத்தை யதிரி சியமாகப்பண்ணி நித்தியம் பிரமாகாரமாகச் சிந்தனைசெய்து ஏகசித்துரசத்தி னானிறைந்திருக்கிற யோகத்தினு லெப்போ தும் ரமித்திரு. இதுவே யோகசித்தி. இந்தப்படி மனசு பரி பக்குவம் வந்ததேசித்தி. இதுவே முடிந்தநிலை. இந்தநிலை குருதேவதைகளை யன்னிய பத்திபண்ணுமல் யாதாமொருவ ரனன்னியபத்திபண்ணுவார்களோ அவர்களுக் குடனேவரும் மற்றபடி வருகிறதல்ல. இந்தப்படி பூரணயோகத்திலேதா

னேநின்று சீதோஷ்டன வெகுமான அவமான வைரங்களி
ல்லாமற் சமம்பண்ணி ஒருதியானமுமில்லாமல் ஒன்றுஞ்
செய்கிறதுமில்லாமற் பேச்சுமில்லாமல் எல்லாம் பிரமமாக
வேயிருவென்று திருவுளம்பற்றித் திரிசிய பதார்த்தத்தி லிச்
சையில்லாதவனாய்ச் சாந்தனாய்த். தாந்தனாயச். சமபுத்தியுண்
டானவனுமாய்ச் சருவகாலமுஞ் சந்துஷ்டனாய் ஆத்மசொ
ரூபனாய்ச்சமஸ்ததிக்குகளிலுஞ் சுகசொரூபமாகச்சஞ்சரி-நிரு
வாசனையா லொருபிடிப்புமில்லாமல் நிர்மலனாய்ப் பந்தரகி
தனாய்ச் சஞ்சரி. சமஸ்கார பெலனுண்டானாலும் பிராணவா
யுவினாலுலர்ந்த விலைபோலச் சஞ்சரி, இப்படிச் சஞ்சரித்தும்
பூரணமாகவேயிரு. இதுவேநிலை, என்றும்-மோட்சமாகிற.
திவ்விடமவ்விடமெனகிறதில்லை. கிராமாந்திர லோகாந்தர
த்திலில்லை. அஞ்ஞான முடிந்துபோனதே மோட்சமென்று
சற்குருசுவாமி திருவுளம்பற்ற இந்தவார்த்தையைக் கேட்டு
த் திர்த்தியடைந்து கிருதார்த்தனானான்.

அபரோட்சாத்மானுபவதீபிகை முற்றுப்பெற்றது.

சர்வஞ்சின்மயம்.

---

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீசங்கராசாரியசுவாமிகளால்

அருளிச்செய்த

# துவாதசமஞ்சரிகாதோத்திரம்.

அடே மூடா மரணசமயத்தில் யமன் வந்தால் டுகிறுங் கரணே என்று சொல்லப்பட்ட வியாகரணசூத்திரம் உன்னைக்காப்பாற்றுது; ஆகையால் கோவிந்தனையே பசனைசெய் (க)

மூடனே நீ தனத்தின் வரவிலேயே இருக்கின்ற ஆசையை விட்டுவிடு கோவிந்தனையே பசனைபண்ணு; மனதில் ஆசையில்லாத நல்ல புத்தியைச்செய்; உன்னுற் செய்யப்பட்ட கருமத்திற்குச் சரியாகக்கிடைத்த தனத்தைக்கொண்டே சித்தத்தை ஆநந்தப்படுத்திக்கொண்டு கோவிந்தனையே பசனை செய்.

(உ)

ஸ்திரீகளுடைய ஸ்தனம் நாபி இவற்றைப்பார்த்து மிகவும் கெடுதியைத்தருகிற மோகத்தாலுண்டான ஆவேசத்தை யடையாதே; கோவிந்தனையே பசனை பண்ணு. மீண்டும் அவற்றில் ஆசை யுதிக்கில் மனதில் இந்த வஸ்துக்களை அடிக்கடி மாமிசம் வபைமுதலான உருவங்களாகச் சிந்தைசெய்; இதனுல் இரத்தம், மாமிசம், கிருமி, மலம்முதலாகிய துற்கந்தரூபமான ஸ்திரீகளினது தேகத்தில் ஆசைவராது. ஆகையால் கோவிந்தனையே பசனைபண்ணு. (ந)

தாமரையிலையிலிருக்கிற உதகம்போல பிராணன் வெகு சஞ்சலமென்றும் சகலலோகமும் வியாதி அபிமானம்

இவைகளால் விழுங்கப்பட்ட தென்றும் சோகத்தால் கெடுக்கப்பட்டதென்றும் அறிந்து கோவிந்தனையே பசனைசெய். ()

நீ திரவியம் சம்பாதித்துவரச் சத்தியுள்ளவரையில் உன்னைச்சேர்ந்த புத்திரன் முதலாயினோர் ஆதரிப்பார்கள், பிறகு தேகத்தில் கிழத்தனம் வந்து தள்ளாமையுடன் சீவித்திருந்தால் வீட்டில் ஒருவனும் உன் வார்த்தையைக் கேட்கவு மாட்டார்கள் ஆகையால் இவைகளை நினைந்து அவைகளிலுள்ள ஆசையைவிட்டுக் கோவிந்தனையே பசனைபண்ணு. (௫)

தேகத்தில் பிராணவாயு உள்ளவரையில் வீட்டில் உன ஸ்திரீயானவள் க்ஷேமத்தை விசாரித்து உபசரிப்பள். தேகத்திற்கு அபாயகாலத்தில் பிராணவாயு போய்விட்டால் அந்தச்சவரூபதேகத்திலே முன் ஆசையுள்ளவளா யிருந்த உன் பாரியாளே பயமுடையவளாகிறாள். ஆகையால் இப்படிப் பட்ட விகாரமுடைத்தான தேகத்திலே விவேகிகளுக்கொவ்வாத்துரபிமானஞ்செய்து என் சமுசாரத்திற் சுழலவேண்டும். ஆகையால் இவைகளை இவ்வண்ணமென்று சிந்தித்து விட்டுவிட்டுக் கோவிந்தனையே பசனைபண்ணு. (௬)

பாலனேவிளையாடுதலில் பிரியமுடையவன் தருணனே ஸ்திரியிடத்தில் பிரியமுடையவன்; கிழவனே பிள்ளைமுதலாயினோர் எப்படியிருப்பார்கள். அவர்கள் சீவனத்திற்கு நாம் சம்பாதித்த திரவியம் போதாதே என்று விசேடமான சிந்தையுடையவனுவன்; நிரதிசயானந்த ரூபமான பரப்பிரமத்தில் ஒருவனும் விருப்பமுடையவ னல்லன். ஆதலால் இவைகளை மனதில் சிந்தித்து,விட்டுவிட்டுக்கோவிந்தனையே பசனை பண்ணு. (௭)

உனக்கு எவள் மனைவி எவன் புத்திரன் நீயெவனுக்குச் சொந்தம் எங்கேயிருந்து வந்தாய் இந்தச் சம்சாரம் மிகவும் விசித்திரம்ஆகையால் இதில் சுற்றிக்கொண்டிருக்கிற நீ தத்துவத்தைச் சிந்தித்தறிந்து கோவிந்தனையே பசனைபண்ணு( )

சற்புருடாளுடன் சேர்ந்தால் மூடசங்கம் நிவிர்த்தியாகும் அந்த மூடசங்கம் நிவிர்த்தியாகவே மோகம் நசிக்கும் அந்த மோகம் நசிக்கவே சித்தசாந்தியுண்டாகும் அதனால் சீவன் முத்திபெறலாம். ஆதலால் இவ்வுபாயங்களை அறிந்து கோவிந்தனையே பசனைபண்ணு (௯)

இரத்தபுஷ்டியுள்ளதான யௌவனவயது போய்விட்டால் காமவிகாரம் ஏது; ஜலம் சுண்டிக் காய்ந்து போனால் குளம்ஏது; திரவியம் முதலாயின சீரணித்துப்போனால் சுற்றத்தார் ஏது; எப்போதும் உள்ள தத்துவஞானம் உண்டானால் சம்சாரம் ஏது; ஆதலால் இவைகளை மனதிலே நினைந்து கோவிந்தனையே பசனைபண்ணு. (௧௦)

தனம் சநம் யௌவனம் இவைகளால்திமிரடையாதே; இவை யனைத்தையுங் காலன் ஓர் நிமிடத்திற்குள் கொண்டு போய்விடுகிறான். ஆகையால் மாயாரூபமான இவை யனைத்தையும் விட்டுப் பிரமபதத்தை யறிந்து ஆநந்தத்தை அடைதற்கு ஏதுவாகிய கோவிந்தனையே பசனைபண்ணு. (௧௧)

பகல், இராத்திரி, காலை, மாலை, சிசிருது, வசந்தருது இவைகள் திரும்பித்திரும்பி வந்துகொண்டேயிருக்கின்றன. இப்படிக் காலன் விளையாடுகிறான். ஆயுள் போகிறது. அப்படியிருந்தாலும் ஆசையாகிற வாயுவானது விடுகிறதில்லை. ஆதலா லிவைகளை யறிந்து கோவிந்தனையே பசனைபண்ணு.

வித்தியா சாமர்த்தியர்களான ஸ்ரீமத் சங்கரபகவத் சரணாளால் வியாகரணத்தையே படித்துக் காலத்தைப்போக்கடிக்கிறவனுக்கு இந்தப் பன்னிரண்டு சுலோகங்களால் அசேஷ உபதேசஞ்சொல்லப்பட்டது. ஆகையால் இக்காலத்திலுள்ள புத்திமான்களும் இவ்விஷயங்களை நன்ருய் யூகித்துணர்ந்து கோவிந்தனையேபசனைபண்ணி அப்பிரசாதத்தால் பிரத்தியக்கபின்ன பிரமசொரூபமாகிய தன்னை அறிந்து பரமாநந்தத்தை யடையவேண்டியது. (௧௨)

துவாதசமஞ்சரிகாதோத்திரம்

முற்றுப்பெற்றது.

---

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீசங்கராசாரியசுவாமிகளது

பதுமபாதர்முதலிய

சிஷ்யாளாற்சொல்லப்பட்ட

# சதுர்த்தசமஞ்சரிகாஸ்தோத்திரம்.

## பதுமபாதர்சொல்லுகிறார்.

சாமியமில்லாத மூடனே உனக்குப் பெண் பொன் இவைகளினுடைய சிந்தை ஏது. உன்னை அடக்குகிற எசமானில்லையா. இம்மூன்று உலகங்களிலும் சற்சனங்களுடைய சேர்க்கையொன்றே பிறப்பிறப்பாகிற சமுத்திரத்தை தாண்டுகிறதற்குத் தெப்பமாகிறது. ஆகையால் கோவிந்தனையே பசனைசெய். (க)

## தோடகர்சொல்லுகிறார்.

சடைகளுடையவனும், முண்டிதஞ் செய்துகொண்டவனும்.வேருடன் பிடுங்கப்பட்ட கேசமுடையவனும், காஷாயவஸ்திரத்தால் அதிகமாகச்செய்யப்பட்ட வேடமுடையவனுயுமிருக்கிற மூடன் எல்லாவற்றையும் பார்த்தவனுயிருந்தாலும்டம்பமாகிறதேதவிர,தன்னையறியவில்லை. ஆதலால் அப்படிப்பட்ட ஆத்மஞானமில்லாதவன் வயறுவளர்க்கு நிமித்தம் நானுவிதமான வேடமுள்ளவனேதவிர பூசிக்கத்தக்கவ னல்லன் என்று தோடகாசாரியர் சொன்னார். (உ)

## அத்தாமலகர்சொல்லுகிறார்.

தேகத்தில் அவயவங்களெல்லாந் தளர்ந்துபோய்விட்டது. தலையுரோமம் வெளுத்துவிட்டது. வாயிற் பல்லே

கிடையாது. இப்படிப்பட்ட கிழவன் தடிபிடித்து நடக்கிறன். இவ்வளவுசமீப மரணமுடையவனு யிருந்தாலும் அவனை ஆசாபிண்டம் விடவில்லை. (௩)

சுபோதர்சொல்லுகிறர்.

அவதூத சந்நியாசியாய் குளிர்போக்குதல் நிமித்தம் முன் பக்கத்தில் நெருப்பு சிலவேளை சூரியன் இராத்திரியில் மோவாய்க்கட்டையில் வைக்கப்பட்ட முழங்காலுடையவனு ய் சிலவேளை இப்படிப்பட்டவன் கையிற் பிட்சைவாங்குகிற வன் மரத்தடி வசிப்பன் அப்படிப்பட்டவனையும் ஆசாபாசம் விடுகிறதில்லை. (௪)

கங்காநதி இராமசேதுமுதலான தீர்த்தயாத்திரை செ ய்தாலும் விரதம் தானம் இவைகள் செய்தாலும் ஆத்மஞா னமில்லாதவன் நூறுஜன்மம் பிறந்தாலும் மோட்சமடை யான் இப்படி யெல்லோருக்கும் சம்மதம். (௫)

நித்தியானந்தர்சொல்லுகிறர்.

தேவாலயம் விருட்சத்தடி இவைகளில் இருப்பு உடை யதாயும் பூமியில் படுக்கை தோலே வஸ்திரம் இப்படிப்பட்ட சகல போகநிவர்த்தி யுடையதுமான வைராக்கியமானது எவனுக்குத்தான் சுகங்கொடாது எல்லாருக்குஞ் சுகங்கொ டுக்கும். (௬)

ஆநந்தகிரிசொல்லுகிறர்.

யோகத்திலிருந்தாலுனும், போகத்திலிருந்தாலுனு லும்,சங்கியானுலும்,அசங்கியானுலும்,எந்தப்புருஷனுடைய சித்தம் பிரமத்தினிடத்தில் ஆசையுடனமூந்துகிறதோ அவன் ஆநந்தமே அடைகிறன். (௭)

திடபக்தர்சொல்லுகிறார்.

பகவற்கீதை கொஞ்சம் பாராயணஞ் செய்தவனையும், கங்காசலத்தினுடைய ஓர் திவலை பானஞ்செய்தவனையும், ஒருதரம் விஷ்ணுவைப் பூசித்தவனையும், யமன் அபகரிக்கவும், இம்சைசெய்யவும், நினைக்கவேமாட்டான். (அ)

நித்தியவாதர்சொல்லுகிறார்.

பிறத்தல் இறத்தல் மறுபடி கற்பத்திற்கிடத்தல் இப்படிப்பட்ட அசாரமான கரையில்லாத சம்சாரத்தில் ஓ முராரியே என்னைக் காப்பாற்றும். (கூ)

யோகானந்தர்சொல்லுகிறார்.

வீதிகளிலிருக்கிற கந்தைத்துணிகளால் செய்யப்பட்ட வஸ்திரமுடையவனும், புண்ணியம் பாவம் இவைகளற்ற வழியுடையவனும், யோகத்திலே வைக்கப்பட்ட சித்தமுடையவனுமான யோகியானவன் குழந்தை பைத்தியக்காரன்போலத் துக்கமற்று எப்போது மானந்தியாயிருப்பன். ()

சுரேந்திரர்சொல்லுகிறார்.

நீயார்? நான்யார்? எங்கேயிருந்துவந்தோம்? எவள் எனக்குத் தாய்? எவனெனக்குத்தகப்பன்? என்றிப்படி யூன்றிப்பார்க்கப்பட்ட உன் சம்சாரத்தைசொப்பன விசாரம்போலவே அறி. அப்படியறிவியேயானாலதனால்தத்துவக்கிஞானமுண்டாகு மதனால் மீளுதலில்லாத பிரமபதத்தை யடையலாம். (கக)

மேதாதிதிசொல்லுகிறார்.

ஓ விஷ்ணுவென்கிற பரமாத்மா உன்னிடத்திலுமென்னிடத்திலும் இருக்கிறார். அப்படியிருக்க நீ வியர்த்தமாக

என்னிடத்திற் பொருமைகொண்டு ஏன் கோபிக்கிருய். அப்படியிராமல் எங்குஞ் சமமான சித்தமுடையவனு யிருப்பாய். எப்போதென்ருல் சீக்கிரத்தில் விஷ்ணுத்வரூபமான பரமான்மா சாக்ஷாத்காரத்தை விரும்புவையேயானுல். (௧௨)

பாரதிவமுசர்சொல்லுகிருர்.

உலகத்தில் ஜனங்கள் ஆன்மாவைவிட்டு வியர்த்தமான காமக், குரோத, லோப, மோகமுதலான அனர்த்தங்களைத் தானென்று பார்க்கிருர்கள் ஆன்மஞானமில்லாத மூடர்கள் நரகங்களிற் போடப்பட்டு பசனைசெய்யப்படுவார்கள். (௧௩)

சுமதிசொல்லுகிருர்.

எப்பொழுதும், கீதை, சகஸ்திரநாமம். இவைகளையே கானம்பண்ணவேண்டும். அப்படிக்கே இலட்சுமிபதியான விட்டுணு சுவரூபத்தைத் தியானம்செய்யவேண்டும். எப்பொழுதுஞ் சற்சனங்களுடைய சேர்க்கையே வேண்டும் ஏழையாகியசனத்துக்குப் பணங்கொடுத்தல் வேண்டும். ஆகையால் கோவிந்தனையே பசனைபண்ணு. (௧௪)

டுகிறுங்கரணே யென்னுந் தாதுபாடத்தைப் படித்தலே பரமப்பிரயோசனமென் றெண்ணிக்கொண்டு அப்படியே அதைத் திருப்பித் திருப்பிச் சொல்லிக் காலத்தைக்கழித்த ஓர் பெரியமூடனுன வியாகரண சாஸ்திரியானவன் ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகளுடைய சிஷ்யாளாற் போதிக்கப்பட்டவனும் சோதிக்கப்பட்ட கரணங்களுடையவனுக ஆனுன். உடனே ஞானமுமுண்டாயிற்ற. (௧௫)

சதுர்த்தசமஞ்சரிகாதோத்திரம் முற்றுப்பெற்றது.

---

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

மகாவாக்கியபத்தின் செய்யுட்படி

# பஞ்சகோசநேதிக்கிரமம்.

---

(அவதாரிகை.)

அவ்வறிவையானறிந்து கொள்வ தெங்ஙனமெனில்.

கவி.

அவ்வறிவை யறிவிக்கும் வகை யுரைக்கிலுடலேயறிவாகுமெனிற்பொறிகளைந்துமிலாதறியாக், கவ்வியவிந்திரியந்தானறிவென்று லந்தக்கரணமிலாதறியாது கரணமறிவென்று, லெவ்விடயந்தானறிந்துந்தனையறியாததனை யெழிற்சீவனுட்டிவிக்குஞ் சீவனறிவென்றால், வவ்வியதானல்லாத வெல்லாந்தானென்றேமயங்குமதைப்பகுத்தறியவந்தவறிவறிவே.

(இதன்பொருள்.) அவ்வறிவை-அந்தவதிட்டானஞான சொரூபத்தை, அறிவிக்கும் வகை. தெரிவிக்கின்ற விதத்தை, உரைக்கில்-விளம்புமிடத்தில், உடலே-தேகமே, அறிவாகுமெனில்-ஞானசொரூபமாகுமென்றால், பொறிகளைந்துமிலாது-பஞ்சேந்திரியங்களின்றி, அறியா-தேகமொன்றையுமறியமாட்டாது, கவ்விய- விடயங்களைப் பற்றுகின்ற, இந்திரியம்-பொறிகள், அறிவென்றால்-உணர்வாகுமென்னில், அந்தக்கரணமிலாது-அந்தக்கரணமின்றி, அறியாது, இந்திரியங்களொன்றையுமறியமாட்டாது கரணம்-அந்தக்கரணமானது, அறிவென்றால்-சைதன்னியமாகுமென்னில், எவ்விடயம்-சத்தாதிகளெந்த விடயத்தையும், தானறிந்தும்-அந்தக்கரணமானதுணர்ந்தும்,

தனையறியாது-தன்னைத்தெரிந்துக்கொள்ளமாட்டாது, அத
னை-அவ்வந்தக்கரணத்தை,எழிற்சீவன்-அழகுபொருந்திய சி
தாபாசனானவன், ஆட்டிவிக்கும்-அசைப்பிப்பன், சீவன்-அச்
சிதாபாசனானவன்-அறிவென்றால்,சித்தாகுமென்னில், வவ்வி
ய-கவருகின்ற, தானல்லாத-அச்சிதாபாசனாயிராத, எல்லா
ம்-அந்தக்கரணாதியனைத்தையும் தானென்றே-நானென்கிற
தாக,மயங்கும்-மோகிப்பன். பின்னை அறிவுதானியாதெனில்?
அதை-அச்சிதாபாசனை, பகுத்தறியவந்த-பிறித்துணருகின்ற,
அறிவு-போதமே,அறிவு-அதிட்டானஞானசொரூபமாம்.

## பதசாரம்.

தேகமாத்மாவாகிய அறிவென்று சுருதி யிருப்பதாலுந்
தன்னைச்சூழ்ந்த பதார்த்தங்களை யறிதல் வனிதாதிபோகங்
கள் தனக்குவேண்டுமென்று சம்பாதித்து அனுபவித்தல்-சூரி
யனில்லாவிடிலுலோகவிவகாரநடவாமைபோற்சரீரமில்லா
விட்டா லிவைகட்குப் பிரயோசனமில்லாதிருத்தல் முதலிய
யுத்தியிருக்கையாலும், சகலரும் சரீரம் புசிக்கின்றதையே
நான் புசிக்கின்றே னென்றும் நான் பிராமணனிவன்னம்
பிரமச்சாரியாதியாச்சிரமம் பிறத்தன்முதலியவை யுடையவ
னென்றுஞ் சரீரமே அறிவாய்ப்பேசு மனுபவ மிருக்கையினா
லும் சரீரமே யறிவாகுமென்னில் தேகமறிவல்லவென்று அ
னந்தஞ்சுருதியிருப்பதாலுஞ்சூரிய னஸ்தமனமானாலுலோ
கவிவகாரம் நடவாமைபோல மரணமூர்ச்சையால் ஞானே
ந்திரியங்களில்லாதபோது தேகமிருந்துந் தன்னைச் சூழ்ந்த
பதார்த்தங்களை யறியாதிருத்தல் வனிதாதிகளை யறிந்து
அனுபவியாதிருத்தல் அவைகள் பிரயோசன மில்லாதிருத்
தல் முதலிய யுத்தியிருப்பதுமல்லாமல் மூங்கிலினாலே கட்டு

மியானைமுதலியனைதப்போலவிருத்தல், யோகிகள் கூடுவிட்டு க்கூடுபாய்தல், சொப்பனத்திலிவ்வுடலன்றித்தொழில் நடத் தல், மரணத்தின்பின் ஊஷ்ணதி தெரியாதிருத்தல், நிழல் போலச் சுதந்தரமின்றி பிராணனாலே யாட்டியடக்கப்படல், இதுதேகமென்றறியப்படலால் அன்னியமாயுஞ்சூட்சுமபூத தாமதகுணபரிணாமமான பஞ்சபூதத்தி லுண்டானதாகையா லுற்பத்தியுள்ளதாயும்,பிறத்தற்குமுன்னுமிறந்ததற்குப்பின் னுஞ்சுழுத்திசொப்பனமூர்ச்சைதுஷ்ணீம்பூதாவத்தையோ கஞ்சமாதிகாலத்திலுந் தேகநினைப்பு வருகிறதற்குமுன்னும் பின்னுமில்லாததுந் தவிர அந்நினைவுகாலத்தினும் பஞ்சபூத மாயபவாதிக்கில் அத்தேகமில்லாததால் அசத்தாயும், சுழுத் திமுதலியகாலத்திற் சரீரத்திற்பொருந்தும்நன்மை தீமைகூ டவறியாமையாற் சடமாயும்,கருப்பாசயப்பை யுறுத்தன் மு தலியதற்கேதுவாகையாற்றுக்கமாயும், கருமுதற்றேகாந்த ம்வரை நூறுவறடத்துட்கணந்தோறுமழிவதாயிருப்பதால் அனித்தியமாயும். நாலுமுழமட்டா யாகாயத்தை குறித்தே யிவ்வளவென்று சொல்லக்கூடாத அற்பமா யிருப்பதாற்க ண்டமாயும்,நவத்துவாரத்திலு மலமொழுகல் முதலியதால் அசுத்தமாயும். பிறத்தல் முதலியசட்பாவ விகாரமிருக்கை யால் விகாரமுள்ளதாயும், வாலீபமாதியவஸ்தை முதலி யதுங் கடம்போலத் தெரிதலாற் றிரிசியுமாயு மிருக்கின்ற யுத்தியிருப்பதாலும், என்சரீரம் புசிக்கின்றதென்றும் இன் ன வன்னமாதி என்றும் பிறத்தல் முதலிய தடைந்ததென் றும் பேசுகின்ற வனுபவ மிருப்பதாலும், தூலதேகமும் இ தன்றியிற்பிராணாதிவாயுகன்மேந்திரியங்களேயறிவென்று சுறுதி யிருப்பதாலும்,பிராணனீங்கினவுடன்றேகம்பிணமா தல் சகலவிந்திரியமுமடங்கின சுழுத்தியிலும்பிராணனிருத்

தல்காற்றுள்ளபோதுகப்பலோடுந்தொழில்நடத்தல்போல்
பிராணனுள்ளபோது சரீரவிவகாரநடக்குதல் முதலியயுத்
தியிருப்பதாலும், நான்பிலவான் பசியுடையவன் பேசினே
னென்பது முதலியவனுபவமிருப்பதாலும், பிராணாதிகளே
யறிவென்னிற் பிராணாதிவாயு கன்மேந்திரியங்களறிவல்ல
வென்றனந்தஞ் சுருதி யிருப்பதாலும், சமாதியோக மூர்ச்
சைகாலத்திற் பிராணனில்லா திருந்துந் தேகம் பிணமாகா
திருத்தல் கப்பலிற் பாய்கட்டுமா ளில்லாதபோது காற்றினா
ற் கப்பலோடுந் தொழினடவாததுபோல மனமில்லாத சு
ழுத்தியிற் பிராணனுடற் காவலாயிருந்து மதனாற் சரீரவிவ
காரமொன்று நடவாதிருத்தல் அதுபிணம்போல மூட்டைக
டித்தலாதியை யறியாதிருத்தல் முதலியயுத்தியிருப்பது ம
ல்லாமல்ரதத்தையிழுக்குங்குதிரை செல்லுமிடத்தையறியா
ததுபோலப் பிராணன் வசனாதிதொழில் நடத்தலையறியாதி
ருத்தல் மனதினாலாட்டி யடக்கப்படல்இதுபிராணாதியென
அறியப்படலா லன்னியமாயுஞ் சூட்சுமபூத ராசதகுணத்தி
ன் சமஷ்டிவியஷ்டியிலுண்டான தாலகயா லுற்பத்தியுள்
ளதாயும், முன்பின்னில்லாமன்மத்தியிலு மதன்காரணமா
கு வபவாதிக்கில் அப்பிராணாதியில்லாததால் அசத்தாயுஞ்
சுழுத்திசொப்பனமுதலியதிற்பாம்பாதிவருதலும், மூக்குத்
தியைக் கழற்றுதலுஞ் சுவாச மின்னபக்க மோடுதென்பது
மறியாமையாற்சடமாயும், பசிதாகந் தலையிடி வயிற்றுவலி
முதலியதாற் றுக்கமாயும், சுவாசங் கழிதல் வசனாதியோய்
தலால் அனித்தியமாயும்,தேகத்துக்குட்பிரிவாயிருத்தலாற்
கண்டமாயும், ஏப்பமுதலியதால் அசுத்தமாயும், மூலாதார
த்திலிருந்துண்டாதல் முதலியவிகாரமிருக்கையால் விகார
முள்ளதாயும், தளர்ச்சிமுதலியதை யறியப்படுதலாற் றிரிசி

யமாயு மிருக்கின்ற யுத்தியிருப்பதாலும், என்பிராணுதியெ ன்பது முதலிய வனுபவமிருப்பதாலும்,பிராணுதிவாயுகன் மேந்திரியங்களும் அறிவு அலலவென்பார் "உடலேயறிவா குமெனிற் பொறிகளைந்து மிலாதறியாவெனவும்."

சுரோத்திராதி பஞ்சேந்திரியங்களே அறிவென்று சுருதியிருப்பதாலும், ஆட்டுகின்றவனுள்ளபோது'பாவையானது கூத்தாடுவதுபோல இந்திரியங்களுள்ளபோது சத்தாதி சகலவிடயமுந் தெரிகின்றது சகல கிருத்தியமு நடக்கின்றது முதலிய யுத்தியிருப்பதாலும், நான்கண்டேன் கேட்டேன் என்பதுமுதலிய அநுபவமிருப்பதாலும்,இந்திரியங்களே அறிவென்னில் சுரோத்திராதி பஞ்சேந்திரியங்களறிவல்லவென்று அனந்தஞ்சுருதி யிருப்பதாலும், கூத்துக்கு முதன்மையானவ னிலலாதபோது பாவையை யாட்டுகிறவனுலே அத்தொழில் நடவாததுபோல மனோராச்சியத்தினல் அந்தக்கரணமில்லாதபோது இந்திரியங்களிருந்துமவைகளாற் சத்தாதிகளி லொருவிடயமுந் தெரியாதிருத்தல் ஒருகிருத்தியமும் நடவாதிருத்தல் முதலிய யுத்தியிருப்பதுமல்லாமல் அந்தக்கரணத்தா லாட்டி யடக்கப்படுதலாலு மிது கண் இது காதுமுதலியதென அறியப்படுதலால் அன்னியமாயுஞ் சூட்சும பூத சத்துவகுணவி யட்டியிலுண்டான தாகையா லுற்பத்தியுள்ளதாயும் சுழுத்தி சொப்பன மூர்ச்சை தூஷணிம்பூதாவஸ்தை யோகஞ் சமாதிகாலத்திலும் இந்திரியமிணைப்பு வருகிறதற்கு முன்னும் அதுநீங்கின பின்னு மில்லாததுந் தவிர மத்தியகாலத்திலு மதன் காரணமா யபவாதிக்கில் அப்பஞ்சேந்திரியங்க ளில்லாததால அசத்தாயும் மனோராச்சியமுதலானகாலங்களி லெதிர்ப்படும் விடய மொன்றையு மறியாமையாலும் ஓரிந்திரிய

மற்ற இந்திரியங்களையு மவைவயின்விடயங்களையு மறியா மையாலுஞ் சடமாயும் வெறுப்புவிடயத்தை யறிதலாலும் விருப்பு விடயத்தை யறியாமையாலுந் துக்கமாயுஞ் செவி டாதியாய்ப்போதல் கனவாதியில் நீங்குதல் சத்தாதியை யறிவதோய்தலால் அனித்தியமாயும், காதுமுதலியதானத் தில் வேறுவேருயிருப்பதாற் கண்டமாயும், அசுத்தமானச த்தாதியைக்கேட்டனமுதலியதால் அசுத்தமாயும் நினைவெ ழும்போதுண்டாதல் முதயிய விகாரமிருக்கையால் விகார முள்ளதாயும்,சத்தமுதலியவிடயத்தையறிதலுமறியாமையு ந்தெரிவதாற்றிரிசியமாயு மிருக்கின்ற யுத்தியிருப்பதாலும், என்சுரோத்திராதிகேட்டன்முதலியசெய்ததென்னுமனுப வமிருப்பதாலும், இந்திரியமறிவல்லவென்பார்''கவ்வியவிந் திரியந்தானறிவென்ரு லந்தக்கரண மிலாதறியாவெனவும்,, மனதேயறிவென்று சுருதியிருப்பதினுலும் மனதேதேகேந் திரிய பிராணுதிகளை விளக்கிரட்சித்தல்மனது நினைத்தபடி யாகுதல் ஆட்டுகிறவனுள்ளபோது வேடதாரியாடுந் தொ ழில் நடத்தல்போல மனமுள்ளபோது இந்திரியாதியின் வி வகாரநடக்குதல் முதலிய யுத்தியிருப்பதாலும் நானிச்சா வான் துவேஷியென்பது முதலிய வனுபவமிருப்பதாலும் மனதே அறிவென்னில் மனமறிவல்லவென் றனந்தஞ் சுரு தியிருப்பதினுலும் எஜமானில்லாதபோது ஆட்டுகிறவனு லே வேடதாரியாடுந் தொழில் நடவாததுபோலப் பித்தமு தலியதாற் புத்தியிலலாத காலத்தில் மனதிருந்துந் தேகா தியை விளக்கி ரட்சித்தலு நினைத்தபடியாகுதலு மிந்திரி யாதியின் அறிதல்செய்தலாதி விவகாரநடத்தலு மில்லாதி ருத்தல்முதலிய யுத்தியிருப்பது மல்லாமற் புத்தியினுலா ட்டி யடக்கப்படுதலாலு மிதுமனமென அறியப்படுதலாலும்,

அன்னியமாயுஞ் சூட்சுமபூத சத்துவகுண சமஷ்டியிலுண்டானதாகையா லுற்பத்தியுள்ளதாயுஞ் சமாதிசுழுத்தி மூர்ச்சை உபேட்சாகாலத்தி வில்லாததுந் தவிர மத்தியகாலத்தினும் அதன்காரணமா யபவாதிக்கில் அம்மனதில்லாததால் அசத்தாயும் ஒன்றிற் புத்தியழுந்தியகாலத்திற் றேன்றியநினைவு சத்தமாதியை யறியாமையாற் சடமாயும், பல விடயங்களை மெய்போற்கற்பித்து அதிற் காமாதியுறுதல் முதலியதால் துக்கமாயும், சமாதிமுதலிய காலத்திலும் நினைவோயுந்தோறும் ஒழிதலாலனித்தியமாயும், பிராணதிக்குள்ளாகவு மந்தக்கரணங்களி லொன்றுகவு மிருப்பதாற் கண்டமாயும் காமாதி துர்நினைவுறுதலால் அசுத்தமாயுஞ் சுழுத்தியி லிருந் துண்டாதல் முதலியவிவகார மிருக்கையால் விகாரமுள்ளதாயும் தாமதராசத குணத்தையடைந்து மயக்கமுதலியதும் இச்சைமுதலியதும் அடைத லறியப்படுதலாற் றிரிசியமாயுமிருக்கினற யுத்தி யிருப்பதாலும் என் மனதென்பது முதலிய அனுபவமிருப்பதாலும் மனமும் இதுவன்றியில் புத்தியே யறிவென்று சுருதியிருப்பதாலும் புத்தியே யவையு மனதையுமுதிப்படுத்தல் இகலோக பரலோக காரியங்களிற் கர்த்தாவாய் நிருமித்தல் வாத்தியாருள்ளபோது சட்டாம்பிள்ளை பாடஞ்சொல்லிக்கொடுத்துப் பிள்ளைகள்படிக்கும் விவகாரஞ் சரியாய் நடத்தல்போலப் புத்தியுள்ளபோது மனமுதலியதின் விவகார நடத்தல்முதலாகிய யுத்தியிருப்பதாலும் நான் புத்திவந்தன் கர்த்தாவென்பது முதலிய வனுபவமிருப்பதாலும் புத்தியே யறிவென்னில் புத்தியறிவல்லவென்று அனந்தஞ்சுருதி யிருப்பதாலும் பணப்பிரியமில்லாதபோது வாத்தியார் ஏவிச் சட்டாம்பிள்ளை பாடஞ்சொல்வித்துப் பிள்ளைகள் படித்தலில்லாதது

போலப் பிரியமில்லாத காலத்திலும் வேறுவிடயத்திற் பிரியமுள்ள காலத்திலும் புத்தியானதிருந்து மனதை யுறுதிப்படுத்தலு மிகலோக பரலோக காரியங்களிற் கர்த்தாவாய் நிருமித்தலும் மனமுதலியதின் விவகாரநடத்தலு மில்லாதிருத்தல் முதலிய யுத்தியிருப்பதுமல்லாமற் பிரியமில்லாவிட்டால் நிச்சயித்தல் முதலிய செய்யுஞ்சுதந்தர மில்லாமையாலு மிதுபுத்தியென்று அந்தக்கரணதிக்கு மேலான சைதன்யமாகிற சீவனாலறியப்படுதலாலும் ஆட்டியடக்கப்படுதலாலு மன்னியமாயும் தன்மாத்திரையின் சத்துவகுண சமஷ்டியி லுண்டானதாகையா லுற்பத்தியுள்ளதாயும், தூஷணிம் பூதாவஸ்தை யோகஞ்சமாதி நித்திரை மூர்ச்சைமுதலிய காலத்திலில்லாததுந்தவிர மத்தியகாலத்தினு மதன் காரணமா யபவாதிக்கில் அப்புத்தியில்லாததால் அசத்தாயும் பிரியமில்லாத விடயத்தைச் சரியாக நிச்சயித்தறியாமையாற் சடமாயும். தேகாதியின் தர்மமாதியைத் தனதென்று அபிமானித்தல், பூரணாத்மாவைக் கர்த்தா வாதியாகப் பின்னப்படுத்தல், ஒன்றைப்பிழையாகவறிதல் முதலியதாற் றுக்கமாயும், யோகமுதலிய காலத்திலுஞ் சாக்கிரத்திற் க்ஷணத்தில் நிச்சயமாறியோயுந்தோறும் ஒழிதலால் அனித்தியமாயும் மனதுக்குள்ளிருத்தல் முதலியதாற் கண்டமாயும் இழிவாய் நிச்சயிக்கின்றதால் அசுத்தமாயும் ஓர் சங்கற்பத்திலுண்டாதல் முதலிய விகாரமிருக்கையால் விகாரமுள்ளதாயும் நவகுணமடைதல் அபிமானமுறுதல் முதலியது அறியப்படுதலாற்றிரிசியமாயுமிருக்கின்ற யுத்தியிருப்பதாலும், என்புத்தியென்பது முதலிய வனுபவமிருப்பதாலும், புத்தியுமறிவல்லவென்பார்; "கரணமறிவென்றுலெவ்வி

டயந் தானறிந்துந் தன்னையறியாததனை யெழிற்சிவ னூட்டிவி க்குமெனவும்."

ஆனந்தமயனாகிய சீவனறிவென்பதாகச் சுருதியிருப்ப தாலும் சுழுத்தியிற் புத்தி முதலிய தெல்லாமிறந்து சூனிய மாயிருப்பது மறிதல் சம்பளப்பிரிய முள்ளபோது வாழை க்காயைப் பழுக்கச் செய்விக்குந்தொழில் நடத்தல்போல பிரியமுள்ளபோது புத்தி நிச்சயமுதலிய தொழில் நடத்தல் முதலாகியயுத்தியிருப்பதாலும், நானறிவே னறியேனென் பது முதலிய வனுபவமிருப்பதாலும், சீவனே அறிவென்னி ற் சீவனறிவல்லவென்று அனந்தஞ்சுருதி யிருப்பதாலும், சுழுத்தியிற் சூனியமாயிருத்தலுஞ் சுகமாயிருத்தலு மறிகி ன்ற சீவனுபேட்சா வேளையில்லாதிருத்தல் பழஞ்சாப்பிடு கின்றதற்காகச் சம்பளங்கொடுக்கு மிராசனில்லாவிட்டால் வேலைக்காரனாலே பழுக்கவைக்குந் தொழில் நடவாதது போல அகண்டாகார அறிவானந்தமாகிய ஆத்மாவில்லாவி ட்டாற் பிரியந்தோனறிப்புத்திமுதலியதின் றொழில நடத் தற் கேதுவில்லாதிருத்தல் முதலிய யுத்தியிருப்பதுமல்லா மற் பிரியமாதியிடையிற் றோன்றி யழிதலாலும் சீவனான வன் ஆத்மாவினா லிவன் சீவனென்று அறியப்படுதலாலும், ஆட்டியடக்கப்படுதலாலும் அன்னியமாயும் மூலப்பிரகிருதி யின் ராசதகுண அவித்தையிற் பிரதிவிம்பித்திருக்கின்றவ னாகையா லுற்பத்தியுள்ளதாயும் உபேட்சாவேளை முதலா னகாலத்திலில்லாததுந்தவிர மற்றகாலத்திலும் அதன்கார ணமாக அபவாதிக்கில் சீவனில்லாததால் அசத்தாயும் தா னல்லாதனதைத் தானென்று மயங்குதலாலும் ஆகாதவிடய த்திற் பிரியமோதப் பிரமோத் மடையலாலுஞ் சடமாயும்

கர்த்தாவாதியா யிருப்பதாற் றுக்கமாயும் அவ்விருப்பு நிலை யற்றதானதால் அனித்தியமாயும் அதனாலும் பின்னமுதலி யதினாலுங் கண்டமாயும் அறியாத தன்மையினால் அசுத்த மாயும் ஆணவத்திலிருந்து வெளிப்பட்டதான வுண்டாதல் முதலிய விகாரமிருக்கையால் விகாரமுள்ளதாயும் மயங்கு தல் அறிவறியாமையா யிருத்த லறியப்படுதலாற் றிரிசியமா யுமிருக்கின்ற யுத்தியிருப்பதாலும் என்சீவனென்பது முத லிய அநுபவமிருப்பதாலுஞ் சீவனறிவெல்ல வென்பார். "சீவனறிவென்றால் வவ்வியதானல்லாத வெல்லாந்தானெ ன்றே மயங்குமெனவும்."

சீவன்முதலியவைகளை யறிகின்ற ஞானசொரூபமே யறிவென்று சுருதியிருப்பதாலும் பஞ்சகோசங்களின் அன் னுவயவெதிரேகங்களைக் கண்டுகொண்டு எந்தக்காலத்திலு மிருப்பதுமல்லாம லிதுவென மற்றொன்றினாற் சுட்டி யறிய ப்படாமலும் ஆட்டியடக்கப்படாமலு மிருப்பதாற்றானும் தானுற்பத்தியாகின்றதற் கேதுவான வெறொன்றில்லாதப டியா லுற்பத்தியற்றதாயும் விருத்திமுதலியவை தோன்றி யிருந்தொடுங்குதற் கேதுவாயிருப்பதாற் சத்தாயும் அஷ் டப்பிரகாசத்தையும் விளக்கியறிதலாற் சித்தாயும் பொரு ளாதி ஆறையும் விட்டுவிடப்படாத அதிப்பிரியவஸ்து வா தலா லானந்தமாயும் நான்கு அபாவமு மற்றுச் சதோத யமாயிருத்தலால் நித்தியமாயும் மூன்று பரிச்சேதமுமற் றுச் சர்வத்திலும் சம்பந்தித்திருப்பதாற் பூரணமாயும் சக லமுந் தன்னிடத்தில் விவர்த்தமாகையாற் சுத்தமாயும் என்று மொருபடியாயிருத்தலால் விகாரமற்றதாயும் தன னைப்றியத்திருக்கு வேறொன்றில்லாதபடியால் அதிரிசியமா

யுமிருக்கின்ற யுத்தியிருப்பதாலும் நான் சர்வவிலட்சணன் நான சர்வசாட்சி நான் சர்வாதாரன் நான் சர்வாதிட்டானன் நான் சர்வாத்மா என்பதுமுதலிய அனுபவமிருப்பதாலுஞ் சுயம்பிரகாசமானதானே அறிவென்பார் "அதைப்பகுத்தறியவந்த வறிவறிவே யெனவுங்கூறினர்."

பஞ்சகோசநேதிக்கிரமம் முற்றுப்பெற்றது.

சர்வஞ்சின்மயம்.





## பரிசோதனபத்திரம்.

---

### வாக்கியவிருத்தி.

| க்கம். | சுலோகம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௭ | ௨௧ | ௨ | திவமும் | துவமும். |
| ௬ | ௪௧ | ௧ | தொம்சி | தொமசி. |

### அபரோட்சாத்மானுபவதீபிகை.

| க்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௨௪ | ௨௯ | விசாரமு | விசாரமாகவு. |